உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

சீகாழிச் சட்டநாத வள்ளலார்
அருளிச்செய்த

# சதாசிவரூபம்

**மூலமும் உரையும்**

இஃது
அஷ்டாவதானம்
**பூவை கலியாணசுந்தர முதலியார்**
பரிசோதித்த பிரதிக்கிணங்க,

எட்டயபுரம் சமஸ்தான வித்வான்
**திருமயிலை வி. சுந்தரமுதலியாரால்**
பார்வையிடப்பட்டது.

**மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை**,
87, தம்புசெட்டி வீதி, சென்னை.
1917
விலை அணா 4

# முகவுரை.

அநாதி முத்தனுகிய பெருமான் அநாதி பெத்தர்களாகிய ஆன்மாக்களின் அநாதிமலத்தை நீக்குவான் அநாதியிலேயே அநாதி சதாசிவமூர்த்தியாய் எழுந்தருளித் தனது ஈசானுதி திருமுகங்களினின்றுந் தந்த காமிகாதி இருபத் தெட்டாகமங்களு ளொன்றுய வாதுளாகமத்தினின்றும் தமிழில் சூத்திரரூபமாய் மொழிபெயர்த்துச் சதாசிவரூபம் என்னும் இந்நூலைச் சீகாழிச் சட்டநாதவள்ளலார் உலோகோபகாரமாக இயற்றியருளினர். சிவஞானபோதமாதி ஞானசாத்திரங்கள் பதினுன்கினிற் பழகும் பூர்வ புண்ணிய முடையாராகிய சுத்தாத்வித சைவர்கட்கு இந்நூல் அத்தியாவசியமாய் வேண்டியிருத்தலின், இதனை வெளிப்படுத்துவான் ஆவல் கொண்டு சேகரித்த கரலிகித பிரதிகள் இரண்டில் முதற் கிடைத்ததற்கு ஆதி கண்டிலேம்; இரண்டாவது கிடைத்ததற்கு அந்தங் கண்டிலேம். ஆயினும் இரண்டினை யுஞ் சேர்த்து ஒருவாறு திருத்திவருகையில், யாழ்ப்பாணம் சைவப் பிரசாரணர் ஸ்ரீமத் செந்திநாதையரவர்கள் சுத்தப் பிரதியொன்று கொடுக்க, இதனையே யாதார மாய்க்கொண்டு ஆராய்ந்து ஆங்காங்கு ஆகம சம்பந்தமாய் நேர்ந்த சமுசயங்கள் திருவண்ணுமலை ஆதீனம் ஸ்ரீமத் ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகளால் நீங்கப் பெற்று அச்சிட்டு முடித்தனம்.

இதுபோன்ற பல சாத்திரங்கள் இன்னும் பற்பலவுள. இவற்றுட் சென்னை யிலுள்ள வித்வான்களிடத்துஞ் சிற்சிலவுள. இவ் வித்வான்களோ அவற்றை யச்சி டத் துணிகின்றரில்லை. அச்சிட்டு வெளிப்படுத்தும் ஆவலுடையாருக்குங் கொடுக் கின்றுரில்லை. ஆங்காங்கு அலைந்து அரிது சம்பாதித்து ஆய்ந்து அச்சிட்டபின், அது குறையிது மிகை யெனப் புறங்கூறிப் பூரிக்கின்றனர். அழிகின்ற திசையிலிருக்கு மரிய கிரந்தங்களை யச்சிற் கொணர்த லறிஞருக் கழகன்றே? அந்தோ! இவ்வித் வான்கள் தங்கள் பெட்டிகளிற் சேமித்துவைத்திருக்கு மேடுகளை யெக்காலத் தெதன் பொருட்டுபயோகப்படுத்தக் கருதியிருக்கின்றனரோ அறியேம்! அறியேம்!! இவ்வள வும் நமது கிரந்தங்களிடத்துள்ள அன்பின் மிகுதியாற் சொல்லத் துணிந்தேம். இவர்கட்கு ஈச்சுரன் கிருபை புரிவாராக.

மணவழகு.

உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

**மலைவளர் குங்கும வன முலை சுரந்த**
**கலைவளர் ஞானங் கதிர்மணி வள்ளத்**
**தந்நிலை யமுதுசெய் தமலனை நோக்கி**
**யென் னுளங் கவர்ந்தவ னிவனென் றேத்திய**
**மறைத்தழிழ்க் கவுணியன் மலர்க்கழல் வணங்கிப்**

**பரை முதற் பஞ்ச சத்தி களையும்**
**விரைவுட னைந்தொழில் விரிப்பது வேண்டி**
**யாக்கி யவர்க ளிடத்தி லருட்சா**
**தாக்கிய மைந்தாய்த் தம்மி லவை திரண்**
**டெழிற்றெழிற் சாதாக் கியமா யதுமிவர்**

**நிழற்கதிர்ச் சகள நிட்கள மாகையிற்**
**சுத்தா சுத்த தத்துவ மிவர்தமை**
**யொத்தா சரிக்கு மொழுக்கமு மிவரே**
**யனைத்தா தார மாகையு மிவர்பாற்**
**றனிச்சிவன் வியாபிக் கின்ற தன்மையு**

**மிவர் தமை யர்ச்சித் தேத்து முறைமையுமங்**
**கவலையில் வாதுளங் காமிக மென்னு**
**மிரண்டு தந்திரத் தெங்கோ னருளாற்**
**றிரண்ட பொருள்களைச் சீர்பெறத் தொகுத்துத்**
**தண்டமிழ்த் தொடையாற் சதாசிவ ரூபமென்**

**றெண்டிறற் பனுவ லுளங்கனிந் துரைத்தோன்**
**ஞானக் குழவியு நாவினுக் கிறைவனு**
**மூனமி லூரனு மொருவடி வாகிச்**
**சிரபுரத் துதித்தோன் றிருநெறிக் காவலன்**
**றருசிவ ஞான சதுர பாடிக**

**னஞ்சுக போத மருள்புரி வள்ளற்**
**கஞ்சுக நாதன் கலைத்தமிழ்க் கடலே.**

## சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சதாசிவரூபம்

## மூலமும் உரையும்.

- **சூத்திரம்.**

### நூல்.

1. **உயர்மறை புகழ்சிவ னேங்கு சதாசிவ**
**னியலு மகேச னென மூன் றுமவை**
**யருவே யருவுரு வுருவா யடைவே**
**யரிதுண ரொன்றைந் தையைந் தாகி**
**யொருதொகை முப்பத் தொன்று கும்மே.**

**(இதன் பொருள்.)** வேதத்தின் முடிவாகிய மகாவாக்கியம் புகழ்கின்ற நின்மலசிவம், அதிலான்ம விரக்கமே வடிவாகிய சதாசிவம், அந்த வான்மவிரக்கமே வடிவாகி அவற்றை நடத்தும் மகேசுரம் என மூவகையாகும். இவைகளில் நின்மல சிவம் வடிவறுதியா யிருக்கும். சதாசிவம் சத்திகாரியத்துடனே கூடிய வடிவும் வடி வறுதியுமா யிருக்கும். மகேசுரம் அந்தச் சத்திகாரியமான வயிந்தவத்தை நடத்தும் வடிவாயிருக்கும், வாக்கு மனாதீதமான சிவமொன்றும், சாதாக்கிய மைந்தும், மகேசுரம் * இருபத்தைந்தும் ஆக முப்பத் தொன்றுஞ் சிவனுடைய உண்மையான தத்துவங்களென்பதாம். **(1)**

---

* இருபத்தைந்தாவன: - "சந்த்ரசேகர ருமாமகேச ரிடபாரூடர் சபாபதி கல்யாணசுந்தரர், சாற்று பிக்ஷாடனர் காமாரி சயவந்தகாரி திரிபுரதகனரே, சிந்தைசெய் சலந்த்ராரி விதிதும் சர்வீரபத்திர நாரசிமநிபாதர், திகழர்த்தநாரீசர், விக்ரதரகங்காளர், சீர்ச்சண்டிகேசநுகரர், நந்தலில் கறைக்கண்ட சக்கராபயப்பிரதர் நவில் கசமுகாநுக்ரகர், பந்தமி லனங்குசுக பிரத்துமரி லிங்கோற்பர் பகரிருப சேடைவரும், பரவுதுட்டர்கள் சிட்ட நிக்கிரக வநுக்கிரகம் பணுமிதை சொண் மூர்த்தி மிவையே." - என்பதனாற் காண்க.

---

அவற்றுள்,

2. **நிகழ்சிவம் பராபரஞ் சூக்குமம நித்திய**
**மெங்கும் பூரண நாசமில் லாதது**
**நின்மல வனுபவ நிகழ்பிர மாணந்**
**தன்னி லுணர்ந் திடு தற்கரி தானது**
**கொன்னவில் குணங்களுங் கூடா ததுவே.**

**(இதன் பொருள்.)** இம்மூவகையில் முந்திய சிவத்தை விளங்கச் சொல்லு மிடத்து முதற்சொன்ன சிவம் சுத்தமாதலால் சிவம் என்றது. பரையை நடத்துதலால் பராபர மென்றது. உயிர்க்குயிராய் நின்றுலும் போதத்தால் எட்டப்படாதாகையால் சூக்குமம் என்றது. தனக்கோர் காரணமின்மையால் நித்தியம் என்றது. சர்வவியா பியாகையால் எங்கும் பூரணம் என்றது. அறிவிக்குந்தன்மை யொழியாதாகையால் நாசமிலி என்றது. தனது சத்தியினுல், பாசத்தொழிஉல நடத்தினும் அதில் தோயாதவனுகையால் நின்மலம் என்றது. இன்னதன்மைய னென்று உவமிக்க வொண்ணுதாகையால் அனுபவாதீதம் என்றது. அறியப்பட்ட அளவைப் பிரமாணங்க ளால் அறியவொண்ணு தாகையால் பிரமாணதீதம் என்றது. சொல்லும் பெரிய குணங்களுக் கப்பாற்பட்டு அனுமயமாய் இருக்கையால் குணுதீதம் என்றது. ஆன்மாக்களுக்கு அனுக்கிரக நிமித்தமாக இப்பத்துத் தன்மைகளும் உடைத்தாகை யால் நிட்களசிவமெனப் பெயர் பெற்றுப் பரமசிவத்தில் ஆயிரத்தொரு கூறுயுற்ற தென்பதாம். (2)

3. **அன்ன சிவமா யிரமா யதிலொன்**
**றுன்னிய பரையதி லாயிரத் தொருகூ**
**றுதியா யதிலோ ராயிரங் கூற்றெரு**
**பேதமிச் சையதி லாயிரம் பிறிவொன்**
**றிணங்கு ஞானம தீரைஞ் ஞூற்றெரு**
**பங்கு தொழிலிவை பஞ்சசத் திகளே**.

**(இதன் பொருள்.)** பரமசிவஊப் பிரியாத அருட்சத்தியானது பரசிவத்தில் ஆயிரத் தொரு கூறுன நிட்கள் சிவனுடனே கூடிக் கிருத்தியத்தைத் திருவுள்ளத்தில் அடைப்பது பராசத்தி என்னப்படும். அதில் ஆயிரத் தொருகூறு வலியையுடைத் தாய்ப் பெத்த முத்திகளில் வியாபிப்பது * ஆதிசத்தி என்னப்படும். அதில் ஆயிரத் தொருகூறு வலியை யுடைத்தாய் வடிவைப் பிரேரிப்பது இச்சாசத்தி என்னப்படும். அதில் ஆயிரத் தொருகூறு வலியையுடைத்தாய் அறிவை விளக்குவது ஞானசத்தி என்னட்படும். அதில் ஆயிரத்தொருகூறு வலியையுடைத்தாய்ப் பஞ்சகிருத்தியத்தை நடத்துவது கிரியாசத்தி என்னப்படும். பஞ்சகிருத்தியங்கஊத் திருவுள்ளத்தடைத்த பரமசிவனுக்கு இவ்வைந்துஞ் சத்திக ளென்பதாம். (3)

---

* ஆதிசத்தி - திரோதான சத்தி.

4. **இவ்வகைச் சத்தி யியம்பிய வைந்துஞ்**
**செவ்விய வுண்மைச் சிவன்படைப் பாகும்.**

**(இதன் பொருள்.)** இப்பஞ்ச சத்திகளும் பரமசிவனுடைய பிரோகமாகிய நிட்களமாயிருக்கு மென்பதாம். **(4)**

5. **சத்தி படைப்பினி யொத்துரை செய்யில்**
**யோகிக ளதிதிகள் ஞானிக ளிவர்க**
**ளாகிய தியானத் தளவிடற் பொருட்டாய்**
**நிட்கள மதனிற் சகள் நிறைந்திடு**
**மப்பெயர் சாதாக் கியமென லாகும்.**

**(இதன் பொருள்.)** இனிச் சத்தி பிரோகத்தைப் பொருந்தச் சொல்லில் சீவன் முத்தர்க்கும், விரத்தராய சாதகர்க்கும், ஞானிகட்கும் அவரவர்க்கேற்ற தியானத்தில் அளவிடுதல் நிமித்தமாக அவிகாரமான நிட்களத்திலே சத்திவிகற்பமான கலைகளாலே தியானமூர்த்தியாக நிரம்புவதே சாதாக்கிய மென்பதாம். **(5)**

6. ***சாதாக்[கு] கியவகை தாஞ்சிவ மமூர்த்தி**
**மூர்த்தி கருத்தா கரும மென்வைந்**
**தோதிய பரை முத லைந்திலுற் பவமே.**

**(இதன் பொருள்.)** சிவசாதாக்கியம் பராசத்தியிலும், அமூர்த்தி சாதாக்கியம் ஆதிசத்தியிலும், மூர்த்தி சாதாக்கியம் இச்சாசத்தியிலும், கர்த்திரு சாதாக்கியம் ஞானசத்தியிலும், கன்ம சாதாக்கியம் கிரியாசத்தியிலும் ஆக பஞ்ச சாதாக்கியம் முன் சொன்ன பஞ்சசத்திகளிடமாகத் தோன்று மென்பதாம். **(6)**

---

* இச்சூத்திரத்தில் பராசத்திக்கு முந்தின அருட்சத்தியாகிய சிற்சத்தியையும் அதிற் றோன்றிய மகா சாதாக்கியரையும் விவரித்திலர். என்னை? பரமசிவனுக்கு அதோமுகத்தில் நித்திரை யாதலானும் அம்முகத்தில் பூசாங்கீகாரமும் அனுக்கிரகமு மின்றாதல்பற்றியென்க. ஈண்டு நித்திரை யென்றது யாதொரு கிரியை நிகமாக அவசரம்.

---

7. **எண்ணு சதாசிவ னீசன் பிரமனு**
**மொண்ணெறி யீசுர னுயரீ சானனுந்**
**தந்துரை சிவசா தாக்கிய முதலிவ்**
**வைந்தினுக் கைந்தா மதிபர்க ளிவரே.**

**(இதன் பொருள்.)** எண்ணுமிடத்துச் சதாசிவன், ஈசன், பிரமீசன், நன்னெறியைத் தரும் ஈசுரன், மேலாகிய ஈசானன் இவர்கள் ஐவரும் உரைதந்த சிவசாதாக்கிய முதலான * பஞ்சசாதாக்கியமும் அதிகதமாக அடைந்துள்ள மூர்த்திகளாம்.

இவர்கள் சாதாக்கியங்களை அந்தர்முகமாக உள்ளே பாவித்து வழிபட்டிருக்கையால் அதிபரென்பதாம். **(7)**

---

* பஞ்சசாதாக்கிய ரைவருக்குந் தத்துவரென்றும் பெயர்.

---

8. **பராபர மேபரஞ் சூக்குமாச் சூக்குமஞ்**
**சூக்குமந் தூலந் தூலஞ் சிவசா**
**தாக்கிய முதலிவ் வைந்தின் றன்மை.**

**(இதன் பொருள்.)** பரைக்குப் பாமாயிருப்பது சிவசாதாக்கியம், பரையுடன் கூடிக் கிருத்தியத்தில் உத்தியோகத்தை யுடையது அமூர்த்தி சாதாக்கியம். சூக்கும மாகிய இச்சாஞானக் கிரியைகளுக்கும் அப்பாற்பட்டுள்ளது மூர்த்திசாதாக்கியம். சூக்குமமான இச்சையிலே தூலமான ஞானக்கிரியைகள் பொருந்தி ஞானபாவகமாய் உள்ளது கர்த்திரு சாதாக்கியம். தூலமான விந்துநாதங்கள் கூடியுள்ளது கரும சாதா க்கியம். காட்டத்தில் தோன்றின அக்கினி காட்டத்துக்கு மேற்பட் டிருந்தாற்போலச் சத்திகளில் தோன்றின சாதாக்கியங்களும் சத்திகளுக்கு மேற்பட்டிருக்கும். அக்கினிக் குக் காட்டம் உபாதானம் அல்லாதது போலச் சாதாக்கியத்திற்குச் சத்தி உபாதான மல்லவென அறிகவென்பதாம். **(8)**

9. **தத்துவ மூர்த்தி தகும்பிர பாவமென்**
**றித்தகை மூன்று யியைந் திடு மிவையே**
**சிவசா தாக்கிய முதலிய தத்துவ**
**மவமில் சதாசிவ முதலைம் மூர்த்திக**
**ளொன்றிய போதி சானு திகளாய்**
**நின்றன முறை நிரை நிறைபிர பாவம்.**

**(இதன் பொருள்.)** தத்துவமென்றும், மூர்த்தியென்றும், பொருந்திய பிரபாவ மென்றும் மூன்றுவகையான தகைமைப்பாட்டால் இசையச் சொல்லப்படும். இவை யே சிவசாதாக்கிய மென்னுந் தத்துவமும் சதாசிவமென்னு மூர்த்தியும் பொருந்தி னது ஈசானம். அமூர்த்தி சாதாக்கியமென்னுந் தத்துவமும் ஈசனென்னு மூர்த்தியும் பொருந்தினது சத்தியோசாதம். மூர்த்திசாதாக்கிய மென்னும் தத்துவமும் பிரமீசனெ ன்னும் மூர்த்தியும் பொருந்தினது வாமதேவம். கர்த்திரு சாதாக்கியமென்னும் தத்துவமும் ஈசுரனென்னும் மூர்த்தியும் பொருந்தினது அகோரம். கன்மசாதாக்கிய மென்னுந் தத்துவமும் ஈசானனென்னு மூர்த்தியும் பொருந்தினது தற்புருடம். மூர்த்திமான்க ளொப்பைப் பிரபாவ மென்பதாம். **(9)**

10. **தத்துவ நிட்களஞ் சகள மூர்த்திக**
**ளிப்பிர பாவஞ் சகள நிட் களமே**
**தத்துவ முயிரெனத் தகுமூர்த் திகளுட**
**லப்பிர பாவ முடலுயி ரெனுமே.**

**(இதன் பொருள்.)** சிவசாதாக்கியமுதலைந்தும் நிட்களமாய்த் தேகியாம். சதாசிவமுதலைந்தும் சகளமாய்த் தேகமாம். இவைகளை யொப்பான ஈசனுதிகளைந்தும் சகளநிட்களமாய் உடலுயிராமென்று சொல்லப்படு மென்பதாம். **(10)**

11. **பரைமுதலைந்திற் பத்திலோர் பங்காய்**
**நிரைநிறை யாக நிகழ்ந்து பிரிந்தன**
**வருள் சிவ சாதாக் கியமுதலைந்தே.**

**(இதன் பொருள்.)** பராசத்தி முதலான ஐந்திலும் பத்திலொரு கூறு வலியையுடைய சிவசாதாக்கியமுதலைந்தும் அனுக்கிரக காரியமாக அடைவாய்ப் பிறந்ததென்பதாம். இனிச் சாதாக்கியங்களின் நாமரூபங்களைச் சொல்லில். **(11)**

12. **சிவசா தாக்கிய மென்ற திருப்பெய**
**ருவமையில் சுத்த மாயையி லுண்டா**
**யதிசூக் குமமா யளவறு மொளியாய்**
**விதமிகு மபர மின்னின் விளங்கி**
**விதமுற வெங்கும் வியாபித் திடுமே**
**சாரு மமூர்த்தி சாதாக் கியமென்**
**றோதிய ரூபை யாதலிற் பெயராய்க்**
**கலைகடந் தொருலிங் காதா ரமதாய்த்**
**தொலைவில் கோடி சூரிய ரொளியாய்த்**
**தூணம தாகிச் சோதியி னூடே**
**காணரு மந்தர்க் கதமூர்த் தியதாய்**
**மேலைத் திவ்விய லிங்க மெனவு**
**மூலத் தம்ப மெனவு மொழிந்தனர்**
**எச்சமில் மூர்த்தி சாதாக் கியமென்**
**றிச்சை குணத்துட னெய்தலி னெய்திக்**
**கலையை யணுகலிற் காணு முருதரித்**
**தெரிதழற் பிழம்பா மிலிங்கம துருவா**
**யுச்சியி லொருதிரு முகமு மம்முகத்**
**தச்சமின் முக்கணு மாயிருப் பதுவே**
**கர்த்திரு சாதாக் கியப்பெயர் ஞானமென்**
**றத்த னெழிற்பெய ராதலி னுலும்**
**ஞான சத்தி * யிலகுத[டு] லானு**
**மூனமில் மறைக ளுரைத்திடு மதுதான்**
**சுத்த மாதலிற் றூய்பளிங் கொளியா**
**யித்தகு திவ்விய லிங்கமு மாயதின்**
**மத்தியில் நாலு முகத்தொடு மன்னி**
**நலமிகு பன்னிரு நயன முடைத்தாய்**
**வலதுகை சூல மழுவா ளபய**
**மிடதுகை நாக மிலங்கிய பாசம்**
**படுமணி வரத மெனும்படை யேந்தி**

# சதாசிவரூபம்

யொடிவி லிலக்கண முடனிருப் பதுவே
கன்ம சாதாக் கியகா ரணப்பெயர்
தொன்மைக் கிரியையிற் றேன்றலி லுடைத்தா
நாத மயமெனு நவிலு மிலிங்கமும்
பேதமில் விந்து மயமாம் பீடமுஞ்
சோர்வறக் கூடித் தொழிற்பட் டிருக்கும்.

* லிங்க என்னுந் தாது சித்திரித்தல் என்னும் பொருட்டாதலால் படைத்தல், காத்தல் முதலியவற்றுல் உலகத்தைச் சித்திரிப்பதாகிய பரமேசரப் பிரபாவமே லிங்மெனப் படும் எனினு மமையும்.

**(இதன் பொருள்.)** சாந்தியா தீதை என்னும் பெயரையுடைய உவமை யற்ற பராசத்தி சுத்தமாதலால் சுத்தமான சிவமென்னும் பெயரை யுடைத்தாய்க் கரண வியாத்திக் கெட்டாத அதிசூக்குமமாய் அளவுபடாத பிரகாசமாய்ப் பார்த்த விடமெல் லாம் தாஞகி மிகுந்த விதப்பட்ட ஆகாசத்தின் மின்போல அரூபத்திலே தியானத் தால் விளங்கப்பட்டுச் சர்வவியாபியாய் இருப்பது சிவசாதாக்கியம். இது லயத்தான மென்று சொல்லப்படும். சாந்தியென்னும் பெயரையுடைய ஆதிசத்தி அரூபியாத லால் அமூர்த்தியென்னும் பெயரை யுடைத்தாய் வடிவறுதியாதலால் விகற்பமான கஜலகளுக் கப்பாற்பட்டுத் தூணுகாரமான ஒப்பற்ற இலிங்கமாய்க் குன்றுத கோடி சூரியப் பிரகாசத்தையுடைய இலிங்கத்தினடுவே காண்டற்கரிய வடிவைக் கற்பித் திருப்பது அமூர்த்திசாதாக்கியம். இது திவ்விய லிங்கமென்றும் மூலத்தம்பமென்றுஞ் சொல்லப்படும். இவ்விலிங்கத்திலேயே சிருட்டி சங்கார காலத்தில் தோற்றமும் ஒடுக்கமும் உண்டாவது. * இலிங் – லயம், கம் – தோற்றம். வித்தை யென்னும் பெயரை யுடைய இச்சாசத்தி சுத்தகுணமான கஜலயைப் பொருந்துதலால் குற்றமற்ற மூர்த்தி யென்னும் பெயரை யுடைத்தாகிக், காணப்பட்ட வடிவையு முடைத்தாகிக், காலாக்கினிக்கொத்த பிரகாசத்தையு முடைத்தாகி, இலிங்கவடிவாகி, அதனுடைய ஊர்த்துவத்திலே ஒப்பற்ற ஒரு திருமுகம், குற்றமற்ற இச்சா ஞானக் கிரியைகளா கிய திருநயனங்கள் மூன்றுங் கண்டிப்பற்ற வடிவு முடைத்தாயிருப்பது மூர்த்தி சாதாக்கியம். இதற்கு இலிங்கமூர்த்தியென்று பெயர். பிரதிட்டை யென்னும் பெயரை யுடைய ஞானசத்தி கருத்தாவுக்கழகிய குணமென்னும் சுபாவமாதலாலும், அந்த ஞானசத்தியிலே தோற்றுகையாலும் கர்த்திருவென்னும் பெயரை யுடைத்தாய்ச் சுத்தமாகையால் துய்ய படிகப் பிரகாசமான திவ்விய லிங்கமுமாய் அதனுச்சியிலே நாலு திருமுகமும் நன்மை மிகுந்த பன்னிரண்டு திருநயனங்களு முடைத்தாய், வலத்திலே சூலம் மழு வாள் அபயம், இடத்திலே பாம்பு விளங்கிய பாசம் உண்டாக் கப்பட்ட மணிவரதம் என்னும் ஆயுதங்களைத் தரித்துக் குறைவில்லாத இலக்கணங் கள் கூடியிருப்பது கர்த்திருசாதாக்கியம். இதற்கு ஞானலிங்கம் என்று பெயர். நிவிர்த்தி யென்னும் பெயரையுடைய தொழிலாகையாலும் பழமையாய் இந்தச் சத்தியிலே தோற்றுகையாலும் தொழிலென்னும் காரணப்பெயரை யுடைத்தாய் நாதமயமென்று சொல்லப்பட்ட ஞானலிங்கமும் பேதமில்லாத விந்துமயமான கிரியாபீடமும் ஏறுமற் குறையாமற் கூடிப் பஞ்சகிருத்தியமென்னும் தொழிஜலயுடை யது கன்மசாதாக்கியம். இது கிரியாலிங்கம் என்றும், அதிகாரத்தான மென்றும்

சொல்லப் படுமென்பதாம். இனி ஞானக் கிரியைகளென்னும் நாதவிந்துக்களுடைய கூட்டத்திற் பொருந்தும் தொழிலை விளங்கச் சொல்லு மிடத்து. **(12)**

13. **கர்த்திரு சாதாக் கியமுத லுலும்**
**வைத்திடு நாத மயமெனத் தகுமே**
**நிவிர்த்தி முதலாய் நிகழ்கலை சத்திகள்**
**வியப்புறு நாலு விந்து மயமே**
**யின்ன பீட லிங்க மிரண்டற**
**வந்நிலை கூடிய வவதரந் தன்னின்**
**முன்னுரை நிவிர்த்தி முதனுற் கலையென**
**மன்னிய விந்து மயமாம் பீடந்**
**தன்னி நடுவே தகுமிந் திகைமுத**
**லரண்டரு நாத கலைகளோ ரைந்துந்**
**திரண்ட வவை தாந் தீதறு நாத**
**மின்ன நாத மயமெனு மிலிங்கந்**
**தன்னி நடுவே சதாசிவ னீசன்**
**பிரம னீசுரன் பேரீ சான**
**னென்னு மைம்மூர்த் திகளிடந் தனிலுயர்**
**சிவசா தாக்கிய முதலைந் தாசற**
**மிச்சிர மித்திடு மவதரத் தீசா**
**னாதிகள் முகபந் தியதா மவிர்சா**
**தாக்கிய மைந்துந் திரண்ட வவதரங்**
**கன்ம சாதாக் கியரா கும்மே.**

**(இதன் பொருள்.)** கர்த்திருசாதாக்கியம், மூர்த்திசாகாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், சிவசாதாக்கியம் இவை நாலும் நாதத்தில் தொழிலறுதி. கன்மசாதாக்கியம் தொழில். நிவீர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி யென்னும் சத்திகள் நாலும் விந்துவிற் றொழில். சாந்தியாதீதை தொழிலறுதியென்று சொல்லப்படும். சொல்லிய தொழிலான நிவிர்த்தியாதி பீடமும் தொழிலறுதியான கர்த்திரு முதலான லிங்கமும், கன்மசாதாக்கியமான லிங்கமும் சாந்தியாதீதையான பீடமும் தம்மில் ஒத்தவிடத்திலே முன் சொன்ன ஆதிமுதல் நாலு சத்திகளும் பிரேரிக்கப்பட்ட வயிந்தவமான சாந்தியாதி நாலும் தந்தொழிலை உள்ளடக்கித் திரண்டிருக்குங் குடிலையென்னும் பீடத்தின்மேல் தகைமைப்பாட்டால் வியாபினி முதலான சத்திகளால் பிரேரிக்கப்பட்ட இந்திகை ஆதியாய்க் காவலான நாதகலைகள் ஐந்தும் பொருந்தின இடம் தீதற்ற நாதமான லிங்கம். இந்த நாதமயமான லிங்கத்தின்மேல் நடு மேற்கு வடக்குத் தெற்குக் கிழக்கென்னுந் திசைகளிலே இருக்கும் சதாசிவன் ஈசன் பிரமன் ஈசுரன் மேலாகிய ஈசானன் என்னும் ஐந்து மூர்த்திகளிடத்திலே மேன்மையான சாதாக்கிய முதலான ஐந்தும் அலைவறப் பொருந்தி யிருந்துள அவதரத்தில் ஈசானுதியன முகவொழுங்காக விளங்கியிருக்கும். சாதாக்கிய மைந்தும் ஒன்றுய்த் திரண்ட அவசரம் கன்மசாதாக்கிய மென்பதாம். **(13)**

14. **சிவசா தாக்கியஞ் சிவன்றனை யாசரித்**
**ததுமுத லொன்றை யொன்று சரித்தலி**
**லணிசா தாக்கிய மைந்துந் திரண்டது**
**தணிவில் கரும சாதாக் கியமே**
**யீனமில்பொருள்க ளெவைக்கு மாதரந்**
**தானே கரும சாதாக் கியமே.**

**(இதன் பொருள்.)** சிவசாதாக்கியம் பரமசிவத்தையும், அமூர்த்திசாதாக்கியம் சிவசாதாக்கியத்தையும், மூர்த்திசாதாக்கியம் அமூர்த்திசாதாக்கயத்தையும், கத்திரு சாதாக்கியம் மூர்த்திசாதாக்கியத்தையும், கனமசாதாக்கியம் காத்திருசாதாக்கியத்தை யும் ஆசரித்திருப்பதால் அழகிய சாதாக்கியம் ஐந்தும் கெடாமல் திரண்டது கன்ம சாதாக்கியம். அழியாத எல்லாப் பொருள்களுக்குந் தான் ஆதாரமாய் அழியும் பொருளை அதிட்டிப்பித்தலால் கன்மசாதாக்கியம் என்பதாம். இந்தக் கன்மசாதாக்கி யம் திரண்ட திரட்சியைச் சொல்லில். **(14)**

15. **சாற்றிய கரும சாதாக் கியந்தான்**
**மூர்த்தி வடிவாய் முனைத்ததி னுலும்**
**பிண்ட மென்று பெயர்பெறு கின்ற**
**வண்ட சராசர வியாபகத் தாலும்**
**பிண்ட மென்பது பீடப் பெயரா**
**யெண்டகு வாதன மீதிருக் கையினு**
**லதுவே திருவடி வாகையி னுலுந்**
**திண்டிற லருவுருத் திரண்டமை யாலும்**
**பிண்டா காய மெனப்பெயர் பெறுமே.**

**(இதன் பொருள்.)** சொல்லப்பட்ட * கன்மசாதாக்கியம் பஞ்சமூர்த்திகளுடைய ஒன்றுதலினுல் உண்டாகையாலும், அண்டத்திலே பிண்டமென்று சொல்லப்பட்டு நின்று சஞ்சரித்துமுள்ள ஆன்ம வருக்கங்கட்கு உயிராய் நிற்கையாலும், பிண்டிகை யென்னும் பெயரையுடைய பீடத்தின் மேலே சொல்லுந் தகைமைப்பாட்டிலே எழுந்தருளி யிருக்கையினுலும், பிண்டமான சத்திதானே திருமேனி யாகையாலும், திண்ணிமையுடைய நிட்களமும் வீரப்பாட்டை யுடைய சகளமும் கூடித் திரண்டு ஒன்றுன தாகையாலும், பிண்டமென்னும் பெயரையுடைய திருமேனியாயிருக்கு மென்பதாம். **(15)**

* கன்மசாதாக்கியர் இலிங்கமும் பீடமுமா யிருக்கினும் ஐந்து திருமுகமும், பத்துக் கரங்களு முடையராய்த் தியானரூபியா யிருப்பர்.

16. **சுத்த காரணத் தத்துவத் தொகையுஞ்**
**சுத்த காரியத் தத்துவ மனைத்துஞ்**
**சென்று கன்ம சாதாக் கியத்தினை**
**யென்று மாசரித் திருப்பது துணிவே.**

**(இதன் பொருள்.)** காரணமாய்ச் சுத்தமாயுள்ள தத்துவத்தின் கூட்டமும் காரியமாய் அசுத்தமாயுள்ள தத்துவத்தின் திரட்சியும் சூழப்பட்டுத் தங்கள் தொழிலுக்கு அதீதமான கன்மசாதாக்கியத்தை இடைவிடாமல் சந்தேகமற ஆசரித்திருக்கு மென்பதாம். **(16)**

**17. தந்துரை சுத்தத் தத்துவ மியம்பின்.**

**(இதன் பொருள்.)** உரைதாப்பட்ட சுத்த தத்துவத்தின் பொருளாகிய அபரவிந்து அபரநாதம் பரவிந்து பரநாதம் இவை நான்கினு மிருந்து சுத்த பஞ்சகிருத்தியத்தைப் பண்ணும் சதாசிவத்தினுடைய வியாத்தி வியாப்பியங்களைச் சொல்லில். **(17)**

**18. முந்துரை நிவிர்த்தி முதலிய வபர**
**விந்து கலையென விளம்பிய வைந்தே.**

**(இதன் பொருள்.)** உரைமுந்தின நிவிர்த்தி முதலாகச் சொல்லப்பட்ட கலையைந்தும் அபரவிந்து விகற்பமான பஞ்சகலைக ளென்பதாம். **(18)**

**19. இந்திகை தீபிகை ரோசிகை மோசிகை**
**கருதிய வூர்த்துவ காமினி யென்னு**
**மபர நாத கலையிவை யைந்தே.**

**(இதன் பொருள்.)** இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, கிருத்தியத்தைக் கருதிய ஊர்த்துவகாமினி யென்னு மைந்தும் அபரநாதத்தின் கலைக ளென்பதாம். **(19)**

**20. சுழுமுனை பிங்கலை சொல்லிடை யுலகம்**
**முழுதுங் காட்டிய நாடிகள் மூன்றே.**

**(இதன் பொருள்.)** பிரபஞ்சத்தைக் கெடாமல் அதிட்டித்து நிற்கும் இச்சா ஞானக் கிரியை யென்று சொல்லப்பட்ட சுழுமுனை பிங்கலை இடை இவை மூன்றும் நாடியாய் நின்று நாதமுதல் பிருதுவியனவுமுள்ள அடுக்குகளைக் குலையாமல் பந்தித்து நிற்குமென்பதாம். **(20)**

**21. சூக்குமை நல்ல சூக்குமை மிர்தை**
**மீக்கொ ளமிர்தை வியாபினி யேபா**
**மாகிய விந்து கலையிவை யைந்தே.**

**(இதன் பொருள்.)** சூக்குமை, ஆதிசூக்குமை, மிருதை, அமிருதை, வியாபினி ஆகிய இவைகள் ஐந்தும் பரவிந்து பேதமாய் அபரவிந்துவை யதிட்டித்து நிற்குங் கலைக ளென்பதாம். **(21)**

**22. காரண வியாபினி வியோம ரூபை**
**யனந்தை யனாதை யனாசிருதை தான்பரங்**

**கலந்த நாத கலையிவை யைந்தே.**

**(இதன் பொருள்.)** அழியாத வியாபினி, வியோமரூபை, அனந்தை, அனுதை, அனுசிருதை ஆகிய இவைகள் ஐந்தும் பரநாத பேதமாய் அபராதத்தை நடத்துங் கலைகள். இந்தப் பரவிந்தும் பரநாதமும் சத்தி சிவான்மியமாயிருந்து அபரவிந்து அபரநாதத்தை நடத்து மென்பதாம். **(22)**

23. **பரசிவம் நூற்றுப் பத்திலோர் பங்கா**
**மவதர மனுசிருத ரவர்நா மத்தினி**
**லமருஞ் சத்தி யனுசருதை யாகு**
**மனுசிருதர் பரம ரனுசிருதை பரையா**
**மனுசிருதர் கரண மனுசிருதை யாகு**
**மனுதர் முதலா வமைவுரு நால்வரு**
**மனுசிருதை முதலருட் சத்திக டம்மோ**
**டிணைந்து சேவித் தீரிரு திசையினு**
**மணைந்திருந் தேத்துவ ரனுசிருதர் தமையே.**

**(இதன் பொருள்.)** பரசிவத்தில் ஆயிரத்தொருகூறு வலியையுடைய அவதரம் அனுசிருதர், அவரைப் பிரியாத சத்தி அனுசிருதை. இவர் பரையை அதிட்டிக்கையால் பரனென்றும் பெயர்பெற்றுத் தானொருவரை ஆசரியாதபடியால் அனுசிருதராய்த் தமக்கவதரரமான பரையும் அனுசிருதையானது. இவரைக் கிழக்குத் தெற்கு வடக்கு மேற்கு என்னுந் திசையிலே அனுதர் அனந்தர் வியோமரூபர் வியாபகர் என்னும் இவர்கள் நால்வரும் அனுதை அனந்தை வியோமரூபை வியாபினி யென்னும் மனுக்கிரக சத்திகளோடே கூடி அனுசிருதரைத் தோத்திரம் பண்ணிக் கொண்டிருப்பார்க ளென்பதாம். **(23)**

24. **அனுதை யனுதர் கரணம தெனவும்**
**வினுவுடன் கிரியை யெனவும் விளம்புவ**
**ரனந்தை யனந்தர் கரணம தாகு**
**மினந்தரு ஞான சத்தியு மென்பர்**
**வியோம ரூபை வியோம ரூபர்க்**
**கியாவருங் கரண மென்ப ரிதன்றியுந்**
**தயாமிகு மிச்சா சத்தியு மாகும்**
**வியாபினி தன்னை வியாபகர் காரண**
**மியாமகி ழாதி திரோபவ மென்ப**
**ரனுதை முதலோ ரைவரை யதீதை**
**முனுவுண ரைங்கலை யெனவுணர் முறையே.**

**(இதன் பொருள்.)** அனுதை யென்னுஞ் சத்தி அனுதருக்குக் * கரணமுமாய்க் கிரியாசத்தியுமாமென்று சொல்லுவார்கள். அனந்தை யென்னுஞ் சத்தி அனந்தருக்குக் காரணமுமாய் அறிவைத் தரும் ஞானசத்தியுமாமென்று விளம்புவார்கள். வியோமரூபை யென்னுஞ் சத்தி வியோமரூபருக்குக் கரணமுமாய்க் கிருபை

மிகுந்த இச்சாசத்தியுமாமென்று உரைப்பரர்கள். வியாபினியென்னுஞ் சத்தி வியாபகருக்குக் கரணமுமாய்க் ஆன்ம வனுக்கிரகமான ஆதிசத்தியுமாம் என்றும் திரோதான சத்தியுமாமென்றும் ஓதுவார்கள். அனுசிருதை முதலான பஞ்சசத்திக ளும் சாந்தியாதீதை முதலான கலைகளைப் பிரேரிக்கையால் அனுசிருதை முதலான சத்திகள் ஐந்தையும் பஞ்சகலைகள் என்று மொழிவார்க ளென்பதாம். **(24)**

**25.** **அனுசிருதர் தம்மோ டனுத ரனந்தர்**
**வியோம ரூபர் வியாபகர் சுத்த**
**மென்றுய ரைந்தொழி லுற்று நடத்தலிற்**
**சகத்திவர் காரிய மான சதாசிவர்**
**வகுத்திடு மைந்து முகத்தொடு மன்னி**
**யசுத்த வைந்தொழி லவைபண் ணுவரே.**

**(இதன் பொருள்.)** அனுசிருதர் அனுதர் அனந்தர் வியோமரூபர் வியாபகர் என்னும் இவர்கள், பரை கிரியை ஞானம் இச்சை ஆதி யென்னும் பஞ்சசத்திகளைக் கொண்டு சிவசாதாக்கியம் கன்மசாதாக்கியம் கத்திருசாதாக்கியம் மூர்த்திசாதாக்கி யம் அமூர்த்திசாதாக்கியம் என்னும் இவர்களை யுண்டாக்கி யொன்றுவிக்கும் தானசுத்த பஞ்சகிருத்தியத்தை நடத்துகையால் இந்த அனுசிருதருடைய அவதரகா ரிய மென்னும் கன்மசாதாக்கியருக்குச் சுத்த அசுத்த பஞ்சகிருத்தியத்தின் தொழில் தானே ஐந்துமுக மாதலால் இத்தொழிலாகிய முகத்துடனே கூடிப் பிரபஞ்சத்தில் அசுத்த பஞ்சகிருத்தியத்தை நடத்துவ ரென்பதாம். **(25)**

**26.** * **சமனை யுன்மனை தம்மி லிரண்டற**
**வமையு மவதர மனுசிதர் தாமே.**

**(இதன் பொருள்.)** சமனையென்னும் பரையும் உன்மனை யென்னும் பரமும் தம்மில் கூடி ஆன்மாக்களைத் திருவுள்ளத்தடைத்த அவதரம் அனுசிருத ரென்பதாம்.

இவர் காரியமான சதாசிவர்க்கு இத்தன்மையான சத்தி மனோன் மணி யொன் றுள்ளது. **(26)**

---

* அத்தியான்மிகமாகிய சமனை உன்மனை யிரண்டுஞ் சத்தியினவதர கலைகளென வுரைக்கு மவசரமு முண்டு.

---

**27.** **அனுசிதர் முதலோ ரைவர் வியாத்தி**
**யளவை யுரைக்கி னயன்மா லுருத்திர**
**னேயு மகேசன் சதாசிவ னென்றிவ**
**ராகி நிரைநிறை யைவரு மாகும்.**

**(இதன் பொருள்.)** அனுசிருதர்க்குப் பிரமன் அளவாகவும், அனுகதர்க்கு விஷ்ணு அளவாகவும், அனந்தர்க்கு உருத்திரன் அளவாகவும், வியோம ரூபர்க்கு

மகேசுரன் அளவாகவும், வியாபகர்க்குச் சதாசிவன் அளவாகவும் வியாத்தி யென்ப தாம். **(27)**

**28. பீடு நீடு வியாபகர் பிறிவா**
**மாட கேச ரவர்பா தலமே**
**ழீடுற வதிட்டித் தினி திருந் தனரே.**

**(இதன் பொருள்.)** பெருமை பொருந்திய வியாபகருடைய மூர்த்தி பேதமான ஆடகேசுரர் சத்த பாதாளங்களைத் தமதாக்கினையால் நடத்தி அவ்விடத்தில் இனிமை யுடன் எழுந்தருளியிருப்ப ரென்பதாம். **(28)**

**29. உய்த்த வியோம ரூபர் பிரிவா**
**மத்தர் கூர்ம வாண்ட ரவர்தா**
**மெழுநாற் கோடி யிருடரு நாகமு**
**மழியா ததிட்டித் தாங்கிருந் தனரே.**

**(இதன் பொருள்.)** மோட்சத்தைப் பிரசாதிக்கும் வியோமரூபருடைய மூர்த்திபேதமான கூர்மாண்டதேவ நாயனுர் அந்தகாரமான இருபத்தெட்டுகோடி நரகமும் கெடாமல் அதிட்டித்து அவ்விடத்தில் எழுந்தருளியிருப்ப ரென்பதாம். **(29)**

**30. ஆலு மறைதே ரனந்தர் பிறிவாங்**
**கால வனலக் கடவு ளுருத்திர**
**ஞால மென்று நவில்பிர மாண்டஞ்**
**சால வளிக்குந் தயாபதி யாகும்.**

**(இதன் பொருள்.)** ஒலிக்கும் வேதங்களால் விசாரிக்கப்பட்ட அனந்தருடைய மூர்த்திபேதமான காலாக்கினி உருத்திரதேவர் பிருதுவி யென்று சொல்லப்பட்ட பிரம்மாண்டத்தை மிகுந்த கிருபையுடனே கூடி அதிட்டித்து எழுந்தருளியிருப்ப ரென்பதாம். **(30)**

**31. அனுதர் பிறிவா மாதா ரங்களைத்**
**தனுமிசை யண்டஞ் சுமந்திருப் பதுவே.**

**(இதன் பொருள்.)** அனுதருடைய மூர்த்திபேதமான ஆதாரசத்தி, நெருங்கிய அண்டங்களைத் தனது உச்சியினுல் சுமந்து எழுந்தருளியிருக்கு மென்பதாம். **(31)**

**32. அனுசிதர் வடிவிற் பிறிந்திடு மனந்தர்**
**குறித்திடு மாதா ரத்தொடு கூடி**
**யசுத்த மாயை யதிட்டிப் பவரே.**

**(இதன் பொருள்.)** அனுதருடைய மூர்த்திபேதமான அனந்தேசுரர் முன் சொன்ன ஆதாரசத்தியுடனே கூடி, அசுத்தமாயையைப் பிரேரித்துக்கொண்டிருப்ப ரென்பதாம். **(32)**

33. **இப்படிச் சுத்த தத்துவ மியாவும்**
**வைப்புறு நாத மயலிங் கத்தினைத்**
**தப்பற வாசரித் திருப்பது தானே.**

**(இதன் பொருள்.)** இப்படி வியாத்தி வியாபகங்களையுடைய மேலாகிய தொழிலான சுத்த தத்துவங்கள் எல்லாம் நாதமயமாகிய நிலைபேறுகவுள்ள இலிங்கத் தை விடாமல் ஆசரித்திருக்கு டென்பதாம். **(33)**

34. **அசுத்த தத்துவ வடைவினை யமல**
**னிசைத்திடு மைந்தொழி லியம்புவ மினியே**
**யந்த வனுசிதர் காரிய மாகிய**
**முந்து சதாசிவ ரைந்தவ தரமா**
**பயனெடு மாலுட னந்த வுருத்திர**
**னியலு மகேச சதாசிவ ரென்றிவர்**
**தம்மை யதிட்டித் திவர்க டமைக்கொண்**
**டம்முறை யசுத்த வைந்தொழில் நடத்துவர்.**

**(இதன் பொருள்.)** நின்மலசிவன் அசுத்த தத்துவங்களை நடத்தும் தான் பஞ்சகிருத்தியங்களை மேற்சொல்லுமிடத்து முன்னே அனுசிதருடைய காரியமாகச் சொன்ன சதாசிவநாயனுர் சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்னும் ஐந்து தொழில்களை நடத்து மிடத்து அவர் சத்தியும் ஐந்தவதரமாகையால் இந்தச் சத்தியுடன் கூடி நின்று பிரமன் விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்றிவர் களைக்கொண்டு முறையே அசுத்த பஞ்ச கிருத்தியங்களை நடத்துவ ரென்பதாம்.

35. **தீர வசுத்தத் தைந்தொழிற் செய்யுங்**
**காரண வியாத்தி கழறுவ மினியே.**

**(இதன் பொருள்.)** வேறு அசுத்த பஞ்சகிருத்தியங்களைப் பண்ணுங் காரணே சுரர் வியாத்தியை மேற்சொல்லுவோ மென்பதாம். **(35)**

36. **அவனி யதிட்டித் தறுநாற் றத்துவ**
**மதனில் வியாபித் திருப்பவ னயனே.**

**(இதன் பொருள்.)** பிருதுவி பூதத்தை அதிட்டித்துப் பிரமாண்டத்தி லிருந்து ஊர்த்துவ வியாத்தியாக ஆன்மதத்துவம் இருபத்துநாலிலும் வியாபித்திருப்பவன் பிரம னென்பதாம். **(36)**

37. **அப்புவை யதிட்டித் தாய பிரகிருதி**
**யொப்பி லுபாதா னத்தொடுங் கூடிப்**
**படிமுதல் மாயை முடிவுமுப் பத்தொன்**
**றடைவுற வியாபிப் பவனட லரியே.** (37)

**(இதன் பொருள்.)** அப்பு பூதத்தை அதிட்டித்து இணையில்லாத பிரகிருதி யென்னும் உபாதானத்திலிருந்து பிருதுவி முதல் பிரகிருதி யளவாகச் சுதந்தரமாக நடத்தி வித்தியாதத்துவம் எழும் ஆன்மதத்துவத்திலே காரியப்படுகையால் மாயை முடிவான ஏழிலும் வியாபித்துச் சொல்லிய முறையே முப்பத்தொரு தத்துவத்தி லும் சமவியாத்தியாக வியாபித்திருப்பவன் வெற்றிப்பாட்டையுடைய விஷ்ணு வென்பதாம். (37)

38. **ஆய தீயை யதிட்டித் தளவறு**
**மாயை யுபாதா னத்தொடு மன்னி**
**மாயை முதலா மண்முடி வாக**
***மூய தத்துவ முப்பத் தொன்றிலு**
**மேய வியாபித் திடுமுருத் திரனே.**

**(இதன் பொருள்.)** தேயு பூதத்தை அதிட்டித்து அளவிடுதற்கரிய காரண மாயை யென்னும் உபாதானத்திலிருந்து மாயைமுதல் பிருதுவி முடிவான நெருங்கின முப்பத்தொரு தத்துவத்திலும் பொருந்த அதோவியாத்தியாக வியாபித்திருப்பவன் உருத்திர னென்பதாம். (38)

[* மூய - மொய்த்த.]

39. **வாயுவை மாயா வகையதிட் டித்துத்**
**தூய வித்தை யுபாதா னத்துட**
**ஞய மாயை யாதிமண் ணளவாஞ்**
**சேய தத்துவ மாணையிற் செலுத்திச்**
**சுத்த வித்தை தொடர்ந்த மகேசம்**
**மொய்த்த சதாசிவ மூன்றுதத் துவத்திலு**
**மொத்து வியாபித் துறையு மகேசன்.**

**(இதன் பொருள்.)** வாயுபூதத்தை அழியாமல் அதிட்டித்துச் சுத்தவித் தையென்னும் உபாதானத்திலே யிருந்து மாயைமுதல் பிருதுவி முடிவாகவுள்ள தத்துவங்களைத் தமதாக்கினையாலே நடத்திச் சுத்த வித்தை அதற்கடுத்த மகேசுரம் அதை நெருங்கின சதாசிவம் என்னும் மூன்று தத்துவத்திலும் சமமாக ஊர்த்துவ வியாத்தியாக வியாபித்திருப்பவன் மகேச னென்பதாம். (39)

40. **ஆகா யத்தை யதிட்டித் தருளா**
**லோதை விந்து வுபாதா னத்துடன்**
**மாயை யடிமுடி மண்ணமர் தத்துவ**
**மேய வாணையி ஞலே நடத்தி**

**சுத்த வித்தை யொடுநா தாந்த**
**தத்துவ மைந்தினு மொத்து வியாபித்**
**துய்த்த சதாசிவ ஞேங்குவ னன்றே.**

**(இதன் பொருள்.)** ஆகாயத்தை யதிட்டித்து நேசமாகிய அனுக்கிரக நிமித்த மாக விந்து என்னும் உபாதானத்திலே யிருந்து மாயை முதல் பிருதுவி முடிவாக அடைவே நிலைபெற்றுள்ள சுத்த தத்துவங்களைத் தமதாக்கினையினுலே பொருந்த நடத்திச் சுத்தவித்தை மகேசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் ஆன விந்து நாதமென் னும் ஐந்து தத்துவத்திலும் சுதந்தரமாக சமவியாத்தியாய் வியாபித்து மோட்சத்தை ஏதுவாக்கும் சதாசிவநாயனுர் எழுந்தருளியிருப்ப ரென்பதாம். **(40)**

41. **ஐந்து காரண ரைம்பூ தத்தினு**
**முந்த வியாபித் திருப்பரிம் முறையே.**

**(இதன் பொருள்.)** காரணேசுரர் ஐவரும் முதன்மையாகிய பஞ்சபூதத்திலே முறையே வியாபித்திருப்பார்க ளென்பதாம். **(41)**

42. **ஐங்கா ரணரையு மைந்து முகத்தினுந்**
**தந்தன னெம்மிறை தான திட் டித்தே.**

**(இதன் பொருள்.)** எமது சுவாமியாகிய சிவன் காரணேசுரர் ஐவரையும் ஐந்தவ தரமாகப் பிரேரிக்கு முறைமை யெப்படியென்னில், சத்தியோசாத முகத்தால் பிரமா வையும், வாமதேவ முகத்தால் விஷ்ணுவையும், அகோர முகத்தால் உருத்திர னையும், தற்புருட முகத்தால் மகேசுரனையும், ஈசான முகத்தால் சதாசிவனையும், கன்மசாதாக்கிய ரென்னும் சதாசிவர் இம்முறையே அதிட்டித்தன ரென்பதாம். **(42)**

43. **சத்திய முதலீ சானமொ டைடந்தினு**
**மொத்தலௌ கீக மோங்கிய வைதிக**
**மத்தியான் மிகமதி மாறகமந் திரமென்**
**றுய்த்த ஞான மைந்துமுற் பவமே.**

**(இதன் பொருள்.)** சத்தியோசாதத்தில் லௌகீக ஞானமும், வாம தேவத்தில் வைதீக ஞானமும், அகோரத்தில் அத்தியான்மிக ஞானமும், தற்புருடத்தில் அதிமார்க்க ஞானமும், ஈசானத்தில் மந்திர ஞானமும் தோன்று மென்பதாம்.

* லௌகீகமாவது – பரம்பரையான அறிவு. வைதீகமாவது – வேதஞ் சொல்லப்பட்ட பசு புண்ணியமான போகாதிகளைக் கொடுக்கைக்குச் சாதனமான அறிவு. அத்தியான்மிகமாவது – அகம் புறமென்னும் அறிவு. அதிமார்க்கமாவது – பரசமயங்களுக் கப்பாற்பட்டு உட்சமயமாய்ச் சித்தாந்தமல்லாத அறிவு. மந்திரமா வது – இரட்சிக்குந் தன்மையையுடைய மந்திரங்களைச் சாதித்து அனுக்கிரகங்களைப் பண்ணுமறிவு. மம – அறிகை, திரம் – இரட்சை. **(43)**
* இவண் சொற்ற ஞானமைந்து மபரஞானத்து ளடங்கும்.

44. **அறைந்திடு ஞான மைந்தினு மயன்முத**
**னிறைந்தன ரைவரு நிரைநிறை வகையே.**

**(இதன் பொருள்.)** சொல்லப்பட்ட ஞான முதலாக ஐந்தினும் பிரமன் முதலான தேவர்கள் ஐவரும் முறையே நிறைந்து இருப்பார்க ளென்பதாம். **(44)**

[**இனி இச்சா ஞானக் கிரியைகளைச் சொல்லுகி**றர்.]

45. **பரசிவ னிச்சை பாங்கில் சதாசிவம்**
**மருவிய ஞான மகேசங் கிரியை**
**விரி தரு சுத்த வித்தை யாகும்.**

**(இதன் பொருள்.)** மேலாகிய சிவன் ஆன்ம வருக்கத்தைத் திருவுளத்தடைத்த இடத்தில் ஒப்பற்ற இச்சா ஞானக் கண்டிப்பு ஒப்பற்ற சதாசிவம். பொருந்திய ஞானம் மகேசம். ஆன்மாக்களுடைய பக்குவா பக்குவத்தை யறியுந் தன்மையாகப் பொருந்திய தொழில் சுத்த வித்தை யென்பதாம். **(45)**

46. **கிளர்சிவ னிச்சையும் ஞானமுங் கிரியையும்**
**வளமலி யுருத்திரன் மலரோன் மாலென்**
**றிவர் தமை முறையே யதிட்டித் தனவே.**

**(இதன் பொருள்.)** பரமசிவனுடைய இச்சை உருத்திரனையும், ஞானம் பிரமனையும், கிரியை விஷ்ணுவையும் அதிட்டிக்குமென்பதாம். **(46)**

**[இனி அம்மூர்த்திகளின் வியாத்தியைச் சொல்லுகிறர்.]**

47. **அயனுயர் தத்துவ மனைத்தையு மதிட்டித்**
**தியலும் பிரகிரு திக்க ணிருந்து**
**வித்தை யேழினும் வியாபித் தனனே**
**வினவிய நெடுமால் வித்தை தத்துவந்**
**தனையதிட் டித்துச் சாதாக் கியமள**
**வினிது வியாபித் திருப்பவ னுகு**
**முருத்திரர் தம்மை யுயர்ந்தோ னிச்சை**
**யதிட்டிக் கையினு லவர்சிவ தத்துவ**
**மொத்ததிட் டித்து வித்தை யுயிரெனுந்**
**தத்துவ மிரண்டினும் வியாபித் தனரே.**

**(இதன் பொருள்.)** பிரமன் பிரகிருதியில் பொருந்தியிருந்து கீழ் ஆன்மதத்துவம் இருபத்துநான்கையும் அதிட்டித்து மேல் வித்தியாதத்துவம் ஏழினும் வியாபித்தனன். சொல்லும் விஷ்ணு புருடதத்துவத்திலிருந்து ஆன்மதத்துவத்தைக் காரியப்படுத்தும் வித்தியாதத்துவத்தினும் ஆன்மதத்துவத்தை யதிட்டித்து மேல் சாதாக்கியம்

அளவாக இனிமையுடன் வியாபித்திருந்தனன். உருத்திரரைப் பரசிவனுடைய இச்சை யதிட்டிக்கையினுலும் அந்த வித்தியாதத்துவத்தை நடத்துகையினுலும் உருத்திரர் ஒக்க நின்று சிவதத்துவத்தை அதிட்டித்துச் சுதந்தரமாக வித்தியாதத்து வத்திலும் ஆன்மதத்துவத்திலும் வியாபித்தன ரென்பதாம். **(47)**

48. **வனசனு மாலும் லௌகிக வைதிக**
**மெனுமிரு ஞான மெய்தலி னிவர்க்குப்**
**பசுநெறி ஞான மியல்பெனப் படுமே.**

**(இதன் பொருள்.)** பிரமனுக்கு லௌகிகஞானமும், விஷ்ணுவுக்கு வைதிக ஞானமும் சுபாவமாகையால் இவர்கட்கு ஆன்மஞானமே இயல்பென்பதாம். **(48)**

49. **பயிலுருத் திரஊனப் பரசிவ னெனலு**
**மயஊன மகேச னெனலு மரிதஊன**
**யியலுஞ் சதாசிவ னெனலு மாமிவ**
**ரிதமுறு மாயை யிலய போக**
**மதிகா ரஞ்செயு மவரென மொழிப.**

**(இதன் பொருள்.)** முன் சொன்ன உருத்திரஊனப் பரசிவனுடைய இச்சை நடத்தலால் பரசிவன் என்றும், ஞானம் பிரமஊன நடத்தலால் மகேசன் என்றும், கிரியை விஷ்ணுவை நடத்தலால் பஞ்சகிருத்தியமான தொழிஊல நடத்தும் சதாசிவன் என்றும் சொல்லப்படும் இவர்கள் போகத்தைப் புசிக்கும் தானமாகிய அசுத்தமாயையிலே இலயபோக அதிகாரங்கஊள நடத்துவார்க ளென்பதாம். **(49)**

50. **சிவம்பயில் சத்தி சேட்டித் தலினிவர்க்**
**கியம்பினம் வியாத்தி வியாபக மிவையே.**

**(இதன் பொருள்.)** பிரம விஷ்ணு உருத்திரர்கஊளச் சிவசத்தி சேட்டிக்கை யினுல் இவர்கட்கு வியாத்தி வியாபகங்கள் இயம்பின மென்பதாம். **(50)**

51. **மீதா கியமறை விளம்பிய கன்ம**
**சாதாக் கியரெனுஞ் சதாசிவக் கடவுள்**
**நிந்தையி லுயிரனுக் கிரக நிமித்த**
**மைந்தொழிற் றிருவுளத் தடைத்த வவதர**
**முந்து மகேச மெனமொழிந் ததுவே.**

**(இதன் பொருள்.)** மேலாகிய வேதம் சொல்லிய கன்மசாதாக்கிய மென்னும் சதாசிவநாயஞர் இச்சையுடன் ஆன்ம அனுக்கிரக நிமித்தமாகப் பஞ்சகிருத்தியத் தைத் திருவுளத்தடைந்து அனுக்கிரகிக்கும் அவதரம் முன் சொன்ன மகேசுர மென்ப தாம். **(51)**

52. **ஈனமில் சதாசிவர் மகேசுர ரெனுமிவ**
**ரான வெளிகா லதிட்டிப் பவரல**
**தூநெறி தருதத் துவங்களு மலவே.**

**(இதன் பொருள்.)** முன் சொல்லிய சிவம், சதாசிவர், மகேசார் என்னும் மூவரில் சிவம் நீங்கலாகக் குற்றமில்லாத சதாசிவர் மகேசுரர் என்னுமிவர்கள் ஆகாயபூதத்தையும் வாயுபூதத்தையும் அதிட்டிக்கும் காரணேசுரரும் அல்ல, சுத்தமா கிய சதாசிவம் மகேசுரம் என்னும் தத்துவங்களும் அல்ல வென்பதாம். **(52)**

53. **தடுப்பரு மந்தச் சதாசிவ முதல்வர்**
**கிடைத்திடு பஞ்ச கிருத்தியந் திருவுளத்**
**தடைத்து விருப்புறு மவதரந் தனிலே**
**யைவகைத் தொழிலா யமைவுறு சத்தி**
**மெய்வரு சுத்த வித்தை யாகும்.**

**(இதன் பொருள்.)** முன் சொல்லிய தடைபடாத சதாசிவநாயஞர் தமக்குச் சுதந்தரமான கிருத்தியத்தை ஐவகையாகத் திருவுளத்தடைத்து நடத்தும் மகேசுரமான அவதாரத்தில் சத்தியு மதுவாக நின்று அந்தத் தொழிலை நடத்துகைக் குக் காரணமாக நின்ற அவதரம் சுத்தவித்தை என்று பெயரான தென்பதாம். **(53)**

54. **இத்தகை வைத்திடு சுத்த வித்தை**
**தத்துவ மலசிவ சத்தி யெனத்தகும்.**

**(இதன் பொருள்.)** இத்தகைய சுத்தவித்தையைத் தத்துவ மென்ஞமல் சிவ சத்தியென்று சொல்லப்படு மென்பதாம். **(54)**

55. **உற்றிடு மதுதா னுபாதா னமதா**
***மற்ற தன் கருத்தா மகேசுர ராகும்.**

**(இதன் பொருள்.)** பொருந்திய அந்தச் சுத்தவித்தை சத்தியனுக்கிரகத்தை நடத்துகையாலும், இதனிடமாக அனுக்கிரகம் பெருகையாலும், அனுக்கிரக உபாதா னம் பொருந்தியிருக்கும் இச்சத்திக்குச் சத்திமான் மகேசுர மென்பதாம். **(55)**

[* மற்று - விஊமாற்று]

56. **விரிந்தவிச் சுத்த வித்தையு மகேசமுந்**
**தெரிந்துணர் சத்தி சிவான்மிக மாயிருந்**
**திருநூற் றிருபத் தீரிரு புவனத்**
**தொருவா துறையு முயிரனுக் கிரக**
**மியற்றுதற் பொருட்டா லிந்த மகேச**
**ரியற்படு மிச்சையி லேழு கோடி**
**போற்றுமந் திரர்களைத் தோற்றுவித் தனரே.**

**(இதன் பொருள்.)** விரிந்த சுத்தவித்தை மகேசுர மிரண்டுஞ் சத்தி சிவான் மிகமா யிருந்து நடத்து மனுக்கிரகத் தொழிலை ஆராய்ந்து அறியில் இந்த மகேசுரரது இயல்பான ஞானுனுக்கிரகம் என்னுந் தொழிலாகிய இச்சையினுல் அபரமந்திரே சுராால் ஆசரிக்கப்பட்ட சத்தகோடி மந்திரங்களை அனுக்கிரகித்து உண்டாக்கி யவர்களைக் கொண்டு இருநூற்றிருபத்து நாலு புவனங்களிலும் மிகுந்த புண்ணியத் தால் அடைந்து ஒழியாமல் இருந்துள்ள ஆன்ம அனுக்கிரகத்தை நடத்துவார்க ளென் பதாம். **(56)**

**[ஆன்மார்க்கத்தில் இச்சையென்னும் பரசிவம், அதற்குக் காரணமான பரை அனுக்கிரக இச்சையை நடத்தும் மகேசுரம், அனுக்கிரக தொழிலாகும் சுத்த வித்தை காரண காரியமான வடிவறுதியும் வடிவும் ஒத்துப் பஞ்சகிருத்தியம் நடத்தும் சதாசிவம் என்னும் இவர்கள் அனுக்கிரகத் தொழிலைச் சொல்லில்.]**

57. **மேவுமிச் சுத்த வித்தை பக்குவ**
**வாவிகட் குயர்சிவ ஞான மளிக்கும்.**

**(இதன் பொருள்.)** பொருந்திய சுத்தவித்தை கன்மந்துலை யொப்பான ஆன்மாக்களுக்கு * நால்வகையான சத்திநிபாதமென்னுந் தொழிலை நடத்தி மேலான சிவஞானத்துக் கேதுவாகு மென்பதாம். **(57)**

* நால்வகையாவன - மந்த தரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்.

58. **அளிக்கு மவதரந் தன்னில் மகேசர்**
**வெளிப்படு நானா விதத்திரு மேனியோ**
**டளப்பருங் காட்சி கொடுத்தணுக் கட்குக்**
**கிளப்பருந் திறலனுக் கிரகம் பண்ணுவர்.**

**(இதன் பொருள்.)** ஞானத்துக் கேதுவான அவதரத்திலே ஆன்மாக்கள் பக்குவத்துக் கீடாக மகேசுரர் பலவகைப்பட்ட திருமேனியுடனே வெளிப்பட்டுச் சொல்லுதற் களவிறந்த காட்சியான திறத்தினால் மேலான பதமுத்திகளைக் கொடுத்து இரட்சிப்ப ரென்பதாம். **(58)**

59. **அழிவில் சதாசிவ ரைந்தொழில் வகையாற்**
**பழுதி லனுக்கிர கம்பண் ணுவரே.**

**(இதன் பொருள்.)** நிலைபெற்றுள்ள சதாசிவர், போகநிவிர்த்தியைப் பண்ணிச், சிவஞானத்துக் கேதுவாகிய பதங்களில் வைத்து இரட்சித்து, அதிகாரநிவிர்த்தி பிறந்தபோது அந்தப் பதத்தை அழித்து, அந்த வழியின் திகைப்பை மறைப்பாக்கி, அந்த மறைப்பை அருளாகிய கிரணத்தால் நீக்கித் தம்மைக் கொடுக்கும் தான பஞ்சகிருத்தியம் என்னும் அனுக்கிரகத்தைப் பண்ணுவ ரென்பதாம். **(59)**

60. **சொல்லிய பரைநற் சுத்தான் மாக்களுக்**
**கெல்லையில் திவ்விய ஞானத் தாலே**
**நல்லனுக் கிரகம் நயந்துபண் ணுவதே.**

**(இதன் பொருள்.)** சொல்லப்பட்ட அருளாகும் பரை முன் சொன்ன இயல்பையுடைய சுத்தான்மாக்களுக்கு அளவிறந்த தெயங்கம் பொருந்திய ஞானத்தால் சிவனுடைய பரிபூரண முள்ளளவும் அறிந்து உபரதியைக் கொடுக்கும் தன்மையாகிய அனுக்கிரகம் பண்ணு மென்பதாம். **(60)**

61. **பண்ணிய வந்தப் பக்குவந் தன்னில்**
**நண்ணிய ஞானக் கண்ணுற் கண்ட**
**திவ்விய மான சிவானந் தத்திஊ**
**யவ்வயி னீவ ரனுசிதர் தாமே.**

**(இதன் பொருள்.)** ஞான ஆதித்தியனுன சிவனது அனுக்கிரகமான அருளால் விளங்கிய ஞானக்கண்ணுல் உண்மையைக் கண்ட அவதரத்தில் விளக்கிடமாகப் பதார்த்தத்தைக் கண்டவனுக்கு மேல் விளக்கு வேண்டாததுபோல் இவஊ அருளு க்கு மேற்படுத்திச் சிவானுபூதியாகிய சிவானந்தத்தைச் சடுதியில் அனுக்கிரகிப்பர் பரனாகிய அனாசிருத ரென்பதாம். **(61)**

62. **இவர்கள் வடிவா கியதிரு மேனியைத்**
**தவறகல் சுத்த வித்தியா தத்துவ**
**மகேச தத்துவஞ் சதாசிவ தத்துவங்ந்**
**தவாத விந்து நாத்தத் துவமெனப்**
**பகர்தரு மறைகள் பகுத்துரைத் தனரே.**

**(இதன் பொருள்.)** சுத்தவித்தை, மகேசுரம், சதாசிவம், சத்தி, சிவம் என்னும் இவர்களுக்குத் திருமேனியும் புவனமும் முறையே குற்றமில்லாத சுத்தவித்தி யாதத்துவம், மகேசுரதத்துவம், சதாசிவதத்துவம், கெடாத விந்துதத்துவம், நாததத் துவம் என்று அரிய வேதங்கள் பிரித்துச் சொல்லு மென்பதாம். **(62)**

63. **அதனுல்**
**தத்துவ மூர்த்தி யிரண்டெனத் தகுமே.**

**(இதன் பொருள்.)** ஆதலினுல், தத்துவம் என்றும், தத்துவத்தை அதிட்டித்து இருக்கும் மூர்த்தியென்றும், இரண்டா மென்பதாம். **(63)**

64. **சுத்த மாயை தொடுத்துரைத் தனமினி**
**வைத்துண ரசுத்த மாயை யிலக்கண**
**மொய்த்துரை செய்வ னுயர்மறை முறையே.**

**(இதன் பொருள்.)** மேலாய வேதஞ் சொன்ன அடைவே சுத்த மாயையின் வியாத்தி வியாபகம் சொல்லி இதனால் உணர்த்தப்பட்ட * அசுத்தமாயையின் இலக்கணம் சொல்லுவா மென்பதாம். **(64)**

* அசுத்தமாயையிற் காரியப்படுந் தத்துவங்கள் இன்றியமையாது வேண்டற்பாலன வென்பதைச் சித்தாந்தவசனபூஷணத்துஒ பாசவிலக்கணத்திற் காண்க.

65. **அதுதான்**
**நித்திய மாக நிறைந்தள விலதா**
**யொத்துறு சகத்துக் கொருவித் தாகி**
**யென்று மழிவிலா தென்றன ரன்றே.**

**(இதன் பொருள்.)** அந்த அசுத்தமாயை அசேதன காரணமாதலால் நித்திய மாய், அசேதனத்தில் பூரணமாய், அனேக சத்திகளுடைத்தாய், ஒன்றுய், தனு கரண புவன போகங்களாய், செகத்துக் கொப்பில்லாத ஒரு விதையாய், சருவசங்கார காலத்திலும் ஆன்மாவுக்கு இடங் கொடுக்கும் தன்மை யொழியாததாய் இருக்கு மென்று சந்தேகமறச் சொல்லுவ ரென்பதாம். **(65)**

66. **அந்த மாயையில் வந்தது * கஜலயே**

**(இதன் பொருள்.)** அனந்தேசுரரால் கலக்கம் செய்யப்பட்ட மாயையிலே யாணவத்தைச் சிறிது நீக்கியபோது அக்கிரியையை நடத்துவது கஜலயாதலால் மாயையிலே கஜல தோன்றின தென்பதாம். **(66)**

* இக்கலாதி தத்துவங்கள் விபுவா யிருக்கிற வான்மாவை இலிங்க சரீரமாய் ஆவரித்தலால் இதுவே புமான்களுக்கு முதல் பந்தம்.

67. **கஜலயி லுதித்தது கால மாகும்.**

**(இதன் பொருள்.)** மறைப்பை நீக்குந் தொழிலாதி கஜலகள் காலத்தே யாகையாலும் கஜலயிலே கால முண்டென்று கலை காலம் நியதி மூன்றின் றெழி லும் ஓரிடத்திலாகையால் இவை மூன்றும் பிரியாமலுள்ளது. சொல்லுமிடத்து முற்பிற் பாடில்ஜல யென்பதாம். **(67)**

68. **நியதியுங் கலைக்கு நிகழவ தாப்பெயர்.**

**(இதன் பொருள்.)** ஆணவம் நீங்கவே யனுக்கிரகமென்று நியமிக்கை யாலும், நியமித்தவிடத்துத் தொழில் கஜலயாகையாலும், அந்தக் கஜலக்கு நியதியென்று அவதாப்பெய ரென்பதாம். **(68)**

69. **நியதியிற் † புருட தத்துவ நேரும்.**

**(இதன் பொருள்.)** பஞ்ச கஞ்சகத்துடன் கூடிப் போகத்தை நியமித்த விடம் புருடதத்துவ மாகையால் நியதியில் புருடதத்துவம் நேர்ந்த தென்பதாம். **(69)**

† புருடதத்துவம் கலை முதலிய ஐந்துங் கூடிய பொதுமையிற் றோன்றுவதாய்ப் போத்திருத்துவத்திற்கு ஏதுவாயிருப்பது.

**70. பின்பு கலையிற் பிறந்தது வித்தை.** *

**(இதன் பொருள்.)** கிரியாசத்தி யாணவத்தை நீக்க ஞானசத்தி போகத்தில் அறிவைப் பண்ணுகையால் பின்பு கலையிலே வித்தை தோன்று மென்பதாம். **(70)**

* இதுவே மூலப்பிரகிருதி; இது மகானென்றும், அவியக்தமென்றும் பெயர் பெறும். முக்குணங்களுந் தம்மு னொத்தநிலை.

**71. அந்த வித்தை யறிந்தது ராகம்.**

**(இதன் பொருள்.)** போகத்தில் அறிவுந் தொழிலு முண்டான விடத்துப் போகத்தில் இச்சை யறிவு இடமாக உண்டாகையால் வித்தையில் ராக முண்டான தென்பதாம். **(71)**

**72. பின்றரும் வித்தை பிரகிரு தியையே.**

**(இதன் பொருள்.)** கலை காலம் நியதி வித்தை ராகம் என்னு மைந்துங் கூடிப் போகமே யறிவாகத் தனுகரணுதிக ளொன்றியே யிருந்த விடம் பிரகிருதி யாகையால் பின்பு வித்தையிலே பிரகிருதி யுண்டா மென்பதாம். **(72)**

**73. பிரகிரு தியிலே பிறக்குமுக் குணமே.**

**(இதன் பொருள்.)** அறிவு தொழில் இச்சை ஒத்தவிடம் பிரகிருதி யாகை யாலும், இதன் விகாரமே சாத்திக இராசத தாமதமென்னும் விகிர்தி யாகையாலும், இதனிடமாகத் தனு கரணுதிகள் உண்டாகையாலும், பிரகிருதியிலே முக்குணம் பிறக்கு மென்பதாம். **(73)**

**74. அப் * பிர கிருதிக் கவதர நாமந்**
**துப்பமர் குணதத் துவமெனச் சொல்லுவர்.**

**(இதன் பொருள்.)** பிரகிருதியின் விகிர்தியே குணமாகையால் அந்தப் பிரகிருதிக்கு அவதாப் பெயர் குணதத்துவமென்று சொல்லுவ ரென்பதாம். **(74)**

* இதுவே மூலப்பிரகிருதி; இது மகானென்றும், அவியக்தமென்றும் பெயர் பெறும். முக்குணங்களுந் தம்மு ளொத்தநிலை.

**75. ஆசறு முக்குண மாவன சாத்திக**
**ராசத தாமத மென்றியம் பினரே.**

**(இதன் பொருள்.)** குற்றமற்ற குணவிகாரமாவன – சாத்துவிதம், இராசதம், தாமதம் என்று சொல்லுவ ரென்பதாம். **(75)**

**76. சாத்வித மொளியைத் தருமென மொழிப**
**ராசத மபர விர்த்தியை யாக்குந்**
**தாமத மந்த காரந் தருமே.**

**(இதன் பொருள்.)** சாத்துவிதம் பிரதானமான ஞானவேதுவா யிருக்கும். இராசதம் தொழிலாகிய போகவேதுவா யிருக்கும். தாமதம் போக மோட்சத்துக் கேது வல்லாத தாகையால் அந்தகாரமாயிருக்கு மென்பதாம். **(76)**

**77. ⁎ சாத்வித[கஅ] ராசத தாமத மயன்மா**
**லேத்து முருத்திர ருக்கிவை முறையே**
**வாய்த்த குணமென வகுத்துரைத் தனரே.**

**(இதன் பொருள்.)** சிருட்டித் தொழில் விளக்கமான சாத்துவிதம் பிரமாவுக்கும், போகத்தொழில் நிலையான இராசதகுணம் விஷ்ணுவுக்கும், போகத்தொழிலற்றவிடம் நிராலம்பமாகையால் அந்தகாரமான தாமதகுணம் குணவுருத்திரருக்கும் இயல்பான ஒவ்வொரு குணமெனப் பெரியோர் வகுத்துச் சொல்லுவர் என்பதாம். **(77)**

---

⁎ இச்சூத்திரத்தில் சொற்ற குணங்கள் பகிர்முகபாவனையில் தூலமாகத் தொழிலின் மேல் வைத்துக் கூறிய அவதரமென அறிக. விவரணஞ் சூதசங்கிதை முதலியவற்றுளுண்டு. ஆண்டைக் காண்க.

---

**78. இந்தக் குணந்தனில் வந்தது புத்தி.**

**(இதன் பொருள்.)** குணமே புத்திக்குத் தாரகமாகையால் குணத்திலே புத்தி தோன்றிய தென்பதாம். **(78)**

**79. புத்தியி லகங்கா ரம்புறப் படுமே.**

**(இதன் பொருள்.)** அறிவு இடமாக ஆங்கார முண்டாகையால் புத்தியிலே அகங்காரம் தோன்றிய தென்பதாம். **(79)**

**80. அதுபூ தாதிக மேவை காரிக**
**முதிர்தை சதமென மூவகை யாகும்.**

**(இதன் பொருள்.)** அந்த அகங்கார தத்துவம்: பூதாதி யென்றும், அமைந்த வைகாரிகமென்றும், முதிர்ந்த தைசதமென்று மூவகை யென்பதாம். (80)

81. **தந்தபூ தாதியிற் சத்ததத் துவமுதற்**
**கந்ததத் துவமென வைந்துமுற் பவமே.**

**(இதன் பொருள்.)** பூதாதி யென்றுரைத்த ஆங்காரத்தில் சத்த பரிச ரூப ரச கந்த மென்னும் ஐந்து தத்துவங்களும் தோன்றின வென்பதாம். **(81)**

82. **சுத்த முதலிய தத்துவ மைந்தனு**
**மத்தகு வெளிமுத லம்புவி யளவாந்**
**தத்துவ மைந்துந் தனித்தனி வருமே.**

**(இதன் பொருள்.)** சுத்ததத்துவத்திலே ஆகாசமும், பரிசத்திலே வாயுவும், ரூபத்திலே தேயுவும், ரசத்திலே அப்புவும், கந்தத்திலே பிருதுவியும் தோன்று மென்பதாம். **(82)**

83. **வைகரி கந்தரும் வாக்கொடு கைகா**
**லுய்யாப் பாயுரு வுபத்ததத் துவமே.**

**(இதன் பொருள்.)** வைகரி யென்னும் ஆங்காரத்திலே: வாக்கு, பாதம், பாணி, உய்த்தலில்லாத பாயுரு, உபத்தம் ஆகிய ஐந்து தத்துவமும் தோன்று மென்பதாம். **(83)**

84. **தைசத வாங்கா ரந்தான் செவிமுத**
**லைந்துணர் மூக்கள வைந்து தத் துவமும்**
**பெய்துணர் மனதத் துவமும் பெறுமே.**

**(இதன் பொருள்.)** தைசதமென்னும் ஆங்காரத்திலே: சந்தேகமற அறியும் தொழிஐலயுடைய சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்நுவை, ஆக்ராணம் என்னுமைந்து தத்துவமும், பகுத்தறியும் மனத்தத்துவமும் தோன்று மென்பதாம். **(84)**

85. **ஆகிய தத்துவ மாரு றுயிர்களின்**
**போகப் பூமி யெனப்புகன் றதுவே.**

**(இதன் பொருள்.)** இப்படி யுண்டாக்கப்பட்ட தத்துவ முப்பத்தொன்றும், இவற்றை நடத்துங் காரண தத்துவ மைந்தும் ஆக முப்பத்தாறும் ஆன்மாக்களுக்குச் சுத்தாசுத்தமாயுள்ள போகம் புசித்தற்கு இடமாதலாலே போகபூமியெனச் சொல்லிய தென்பதாம். **(85)**

86. **தாங்கிய புத்தி தத்துவ மதனிற்**
**பாங்கினி லுதித்த பாவமைம் * பதுமே.**

**(இதன் பொருள்.)** போகத்துக்குத் தாரகமான புத்தி தத்துவத்திலே அந்தப் போகத்துக்கேற்கப் பாவத்தை யுண்டாக்குங் குணமைம்பது முண்டாயின வென்ப தாம். **(86)**

* புத்திதத்துவ மொன்பது குணத்துக்கு மொவ்வொரு குணத்துக் கைம்ப தைம்பதாக நானூற்றைம்பது பாவமாகவுங் காரியப்படும்.

87. **காரணம் பதின்மூன் றெருபது காரியம்**
**பாவுறு மிந்திய பந்தம் பதினென்**
**றியலாங் காரம் புத்தியெட் டெட்டே.**

**(இதன் பொருள்.)** காரணம் பதின்மூன்று, காரியம் பத்து, மேலறியுங் குணத்தையுடைய இந்திரிய பந்தம் பதினொன்று, சொல்லப்பட்ட ஆங்காரம் எட்டு, புத்தி எட்டு, ஆக ஐம்பதும் பஞ்சாதசபாவ மென்பதாம். **(87)**

88. **பன்னிய கரணம் பதின்மூன் றுவன**
**மன்னிய செவி முதல் வாக்கு முதலென**
**புஊயுமீ ரைந்து புறக்கர ணங்களு**
**மனமொடு புத்தி வருமாங் கார**
**மெனமூன் றந்தக் கரணமு மிவையே.**

**(இதன் பொருள்.)** பொருந்திய கரணம் பதின்மூன்றையும் சொல்லில்: மன் னிய சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்நுவை, ஆக்கிராணம், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்னும் புறக்கரணம் பத்தும்; மனம், புத்தி, புத்தியில் தோன்றும் ஆங்காரம் என்னும் அந்தக்கரணம் மூன்றும், ஆகக்கரணம் பதின்மூன் றென்பதாம். **(88)**

89. **காரியம் பத்தே காசினி முதஜலந்**
**தேரியற் கந்த முதலொளி யீருஞ்**
**சீரிய தன்மாத் திரையிவை யைந்தே.**

**(இதன் பொருள்.)** பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பூதம் ஐந்தும்; அழகிய கந்தம், ரசம், ரூபம், பரிசம், சத்தம் ஏன்னும் தன்மாத்திரை ஐந்தும், ஆகப் பத்தும் காரிய மென்பதாம். **(89)**

90. **இந்திய பந்தமு மீரைக் தொன்றவை**
**முந்திய செவிமுதல் மொழி முதல் மனமே.**

**(இதன் பொருள்.)** முன் சொல்லிய சோத்திராதி ஐந்து, வாக்காதி ஐந்து, மனம் ஒன்று, ஆகப் பதினொன்றும் இந்தியபந்த மென்பதாம். **(90)**

91. **கைதரு மெட்டாங் கார மியம்பிற்**
**றைசத வைகா ரிகபூ தாதியென**
**றெய்தாங் கார மிவையொரு மூன்றெடு**
**தமமே மோகந் தனிமக மோக**
**மமைவுறு தரமிச் சிரமே யதஞே**
**டந்த தரமிச் சிரமெனு மிந்த**
**வைந்தாங் கார பேதமு மவையே.**

**(இதன் பொருள்.)** போகவுபகாரமான ஆங்கார மெட்டையுஞ் சொல்லில்: தைசதம், வைகாரிகம், பூதாதியென்னும் ஆங்கார மூன்றும்; போகம் புசிககைக்கு மாறுபாடாய தமமென்னும் அந்தகாரம், மயக்கமாகிய மோகம், அதில் மகத்தாகிய மயக்கமான மோகம், இருள் பொருந்திய அந்தகாரமென்னுந் தரமிச்சிரம், அதில் தெரியாமை யென்னும் அந்தரதரமிச்சிரம் என வைந்தும், ஆங்கார மேலீட்டான மறைப்பாகையால் ஆங்காரபேத மென்பதாம். **(91)**

92. **புத்தி யெட்டே புகழ்தரு மாதரு**
**மத்திற மிருநான் கென்றறைந் தனரே.**

**(இதன் பொருள்.)** புத்திகுணம் எட்டையும் சொல்லில்: தன்மம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வரியம் என்னும் கூட்டமும்; இதற்கு மாறுக உள்ள அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அஈனஸ்வரியம் என்னும் கூட்டமுமாக எட்டும் புத்தி குண மென்பதாம். மேல் இவற்றின் பேதத்தையும் வியாத்தி வியாபகத்தையும் சொல்லுகிறுர். **(92)**

93. **ஞானஞ் சாத்வித நலமிகு தருமமு**
**மானவை ராக்கிய மதஞே டாக்கமு**
**மேஈன யிராசத மதன்மா திகளொரு**
**நான்கையுந் தாமத மாக நவிற்றுவர்.**

**(இதன் பொருள்.)** இக்குணம் எட்டில் ஞானஞ் சாத்து விதத்தைப் பொருந்தி வரும். நன்மை மிகுந்த தருமமும் அதன் பின்ஞன வைராக்கியமும் அதஞேடு ஐஸ்வரியமும் பொல்லாத இராசதத்தைப் பொருந்திவரும். அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அஈனஸ்வரியம் ஆகிய நாலும் தாமதத்தைப் பொருந்திவரு மென்ப தாம். **(93)**

94. **தன்மா திகளுரை தருபத் திருநான்**
**கிம்மா னொன்பதொ டெட்டதன் மாதிக**
**ளீரைந் திருநான் கொன்பா னெட்டெனக்**
**கூறும் புத்தி குணமெழு பதுமே.**

**(இதன் பொருள்.)** * தன்மாதிகளுடைய பேதம் எழுபதையும் சொல்லில், தன்மம் பத்தாவன – அயிம்சை, சத்தியம், பிரமசரியம், கிருபை, குருசேவை, சுத்தம்,

பிரியம், கொல்லாமை, கள்ளாமை, பொய்யாமை. ஞானம் எட்டாவன – தாரம், சுதாரம், தாரணம், சுதாரையந்தம், பிரமோகம், பிரமுத்தி, ரம்மியம், சதாபிரமுத்திதம், வைராக்கியம் ஒன்பதாவன – அம்பை, சலிலை, மோகம், திருடாமை, சுதாரை, சுபாரை, சுனேத்திரை, சுமாரை, உத்தமாம்பத்திகை, ஐஸ்வரியம் எட்டாவன – அணிமா, மகிமா, லகிமா, கிரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், அதன்மம் பத்தாவன – இம்சை, அசத்தியம், அப்பிரமசரியம், கிருபையீனம், குருவிகழ்ச்சி, அசுத்தம், பிரியமின்மை, கொலை, களவு, பொய், அஞ்ஞானம் எட்டாவன – அதாரம், அசுதாரம், அதாரணம், அதாரையந்தம், அப்பிரமோகம், அப்பிரமூத்திதம், அரம்மியம், அசதாபிரமுத்திதம், அவைராக்கியம் ஒன்பதாவன – அனம்பை, அசலிலை, அமோகம், அதிருடாமை, அசுதாரை, அசுபாரை, அசுனேத்திரை, அசுமாரை, அனுதாம்பத்திகை, அஐஸ்வரியம் எட்டாவன – அஅணிமா, அமகிமா, அலகிமா, அகிரிமா, அப்பிராத்தி, அப்பிராகாமியம், அனீசத்துவம், அவசித்துவம். இவ்வாறு விகற்பமான அழகிய புத்தியின் குணம் எழுபதென்பதாம். **(94)**

---

* இவண் சொற்ற தன்மாதி முதலிய, சில ஆகமங்களில் வேறுவிதமாகக் கூறினுங் கருத்துவகையில் ஒன்றுபட்டமையறிக.

---

95. **ஆக்க மில்குணம் பைசா சத்துக்**
**கவ்வயி ராக்கிய மிராக்கத மியக்க**
**மஞ்ஞான மதன்மங் காந்தவந் தன்ம**
**மைந்திர ஞானஞ் சௌமியம் வைராக**
**மியம்பிர சாபத் தியம்பிர மந்தனக்**
**காக்கமொன் றாகச் சுபாவமா யிருக்கினு**
**மொழிபசா சமுத லியோனிக ளெட்டினு**
**மிவைவி யாபித் திருப்பது துணிவே.**

**(இதன் பொருள்.)** பிசாசுகளுக்கு அஐஸ்வரியகுணம், இராக்கதர்களுக்கு அவைராக்கியகுணம், இயக்கருக்கு அஞ்ஞானகுணம், கந்தருவர்க்கு அதன்மகுணம், ஐந்திரரென்னும் சாதிக்குத் தன்மகுணம், சௌமியர்க்கு ஞானகுணம், பிரசாபத்தியர்க்கு வைராக்கியகுணம், பிராமணர்க்கு ஐஸ்வரியகுணம், ஆக இவ்வெண்கணமான தெய்வயோனி பேதத்திற்கு ஒவ்வொரு குணம் சுபாவமாக விருந்தாலும் பிசாச முதலான எட்டுயோனிகளிலு மொன்றிலொன்று கலந்து சந்தேகமற வியாபித்திருக்கு மென்பதாம். **(95)**

96. **ஏய்ந்த பசாச மிராக்கத மியக்க**
**மியங்குங் காந்தவ மைந்திரங் கவலையில்**
**சௌமியம் பிரசா பத்தியம் பிரமமென்**
**றிவற்றுக் குரைகுண நிரைநிறை யோரெட்**
**டிரெட்டிருபா ஞன்கெண் ஞன்கெண்**
**ஊனந்தெண் ணறெண் ணேழெட் டெட்டாய்**
**நண்ணும், புத்தி நவில்குண பேத**

**மெண்ணு லிருநூற் றெண்பதோ டெட்டே.**

**(இதன் பொருள்.)** பொருந்திய பிசாசுகளுக்கு ஐஸ்வரிய குணம் – ௮, இராக்கதருக்கு – ௧௬, இயக்கருக்கு – ௨௪, கந்தருவருக்கு – ௩௨, ஐந்திரருக்கு – ௪0, சௌமியருக்கு – ௪௮, பிரசாபத்தியருக்கு – ௫௬, பிராமணருக்கு – ௬௪, ஆக ௨௮௮. பிசாசுமுதல் எண்மருக்கும் வைராக்கிய குணம் முறையே ௭ ௧௪-௨௧-௨௮-௩௫-௪௨-௪௯-௫௬-ஆக ௨௫௨. ஞானகுணம்-௬-௧௨-௧௮-௨௪-௩0-௩௬-௪௨-௪௮-ஆக ௨௧௬; தன்மகுணம்-௫-௧0-௧௫-௨0-௨௫-௩0-௩௫-௪0-ஆக ௧௮0; அதன்மகுணம்-௪-௮-௧௨-௧௬-௨0-௨௪-௨௮-௩௨-ஆக ௧௫௪; அஞ்ஞாகுணம்-௩-௬-௯-௧௨-௧௫-௧௮-௨௧-௨௪-ஆக ௧0௮; அவைராக்கியகுணம்-௨-௪-௬-௮-௧0-௧௨-௧௪-௧௬-ஆக ௭௨; அனைஸ்வரியகுணம்-௧-௨-௩-௪-௫-௬-௭-௮-ஆக ௩௬; ஆக மொத்த குணபேதம் ௧00௮-ம் மேற்சொன்ன ௨௮௮-ல் அடங்கி யிருத்தலால் ௨௮௮-யே பிரதானமாகச் சொன்ன தென்பதாம். **(96)**

**97.** **சொன்ன குணபேதந் தோன்றிற் றெகையா**
**முன்னூற றைம்பத் தெட்டென மொழிப.**

**(இதன் பொருள்.)** தன்மாதிகுணம்-௭0, ஐஸ்வரிய பேதமாகச் சொல்லிய ௧00௮-யும் அடக்கிக்கொண்டிருக்கிற பேதம் - ௨௮௮, ஆகக் குணத்தொகை-௩௫௮ என்பதாம். **(97)**

**98.** **ஆன முன்னூற் றைம்பத் தெண்குண**
**மானிடர் வியாபித் திருப்பது வழக்கே.**

**(இதன் பொருள்.)** இவ்வாறு முன்னூற் றைம்பத்தெட்டு குணமும் மனிதரிடத் திலே குறைவற வியாபித்திருக்கு மென்பதாம். **(98)**

**99.** **வியன்மிகு முக்குண வியாத்தி விரிப்பி**
**னயன் முத லிந்திர னளவா மமர**
**ரையமில் சாத்வித குணமதிட் டிக்கும்.**

**(இதன் பொருள்.)** வியப்பு மிகுந்த முக்குணத்தின் வியாத்தியை விரியச் சொல்லில் பிரமன் முதல் இந்திரனீறுகவுள்ள தேவர்களை நிலை பெற்ற சாத்துவித குண மதிட்டிக்கு மென்பதாம். **(99)**

**100.** **யாழோ ரியக்க ரசுர ரிராக்கதர்**
**யாது தானவர் பிசாசுகளிவர்களைக்**
**கோதமர் தாமத குணமதிட் டிக்கும்.**

**(இதன் பொருள்.)** கந்தருவர் இயக்கர் அசுரர் இராக்கதர் பேதமான யாதுதானவர் பேய்கள் இவர்களைக் குற்றம் பொருந்தின தாமத் குண மதிட்டிக்கு மென்பதாம். **(100)**

101. **இருதிலத் தியங்கு மிருடி கணங்களைத்**
**திருமிகு மிராசதஞ் சேட்டித் திடுமே.**

**(இதன் பொருள்.)** பூலோகத்தில் நித்தியத்தைப் பெற்றுள்ள இருடிகளை அழகு பொருந்திய இராசதகுண மதிட்டிக்கு மென்பதாம். **(101)**

102. **தாவர பேதஞ் சரித்திடு பதங்கள்**
**காலள வில்லன காலில் லாதன**
**சால வ திட்டிப் பது தா மதகுணம்.**

**(இதன் பொருள்.)** பேதப்பட்ட தாவரங்கள், பறவைகள், அனேக கால்களோ டூர்வன, கால்களின்றி ஊர்வன, ஆகிய விவற்றை மிகுந்த தாமதகுண மதிட்டிக்கு மென்பதாம். **(102)**

103. **அன்ன மனிதரை யதிட்டிக் குங்குண**
**மின்ன தெனப்பிறி தியம்பவொண் ணுமையி**
**னின்ன குணங்கட் கிருப்பிட மாகிய**
**தன்மா தன்மந் தானே தணவா**
**தென்ன ளினுமதிட் டிக்குமென் றதுவே.**

**(இதன் பொருள்.)** முக்குணங்களின் விரிவுயாவுஞ் சுதந்தரமாகவுடைய மனிதர்களை அதிட்டிக்குங் குணம் இன்னதெனப் பிரித்துச் சொல்லக்கூடாமையால் புத்திகுணத்துள் நற்குணம் நாலிற் பிரதானமான தன்மமென்னும் புண்ணிய குண மும், தீய குணங்கள் நாலிற் பிரதானமான அதன்மமென்னும் பாவகுணமும், இவ் விரண்டினடியாக எல்லாக் குணமு முண்டாகையால் சத்திநிபாதமளவும் ஒழியாமல் நின்றதிட்டிக்கு மென்பதாம். **(103)**

104. **தன்மந் தனையது தவிரமூன் றதன்மந்**
**தனையது தவிர மூன்ற சரிக்கும்.**

**(இதன் பொருள்.)** ஞானம்-வைராக்கியம்-ஐஸ்வரிய மென்னும் மூன்று குண மும் தன்மத்தையும், அஞ்ஞானம்-அவைராக்கியம்-அனைஸ்வரியம் என்னும் மூன்று குணமும் அதன்மத்தையும் ஆசரிக்கும். ஆகையால் உலகத்தினிடத்துத் தன்மம் அதன்மமாகிய புண்ணிய பாவமே அதிட்டிக்கு மென்பதாம். **(104)**

105. **அதன்ம விலக்கண மாவன வேது**
**வாத செற்ப மதமிகு விதண்டை**
**விவாதம் விஞ்சைய சஞ்செயந் தானே**
**துதைந்திடு மசுத்த சூனிய வாதம்**
**ஞானந் தெய்வந் தருமநல் லருத்த**
**மீனமில் வீடிவ் வைந்துநிந் தனையே.**

**(இதன் பொருள்.)** அதன்மமாகிய பாவம் ஏறுவழி யெப்படியெனில், பொருளல்லாதவற்றைப் பொருளென்று திட்டாந்த மெய்நூலாகச் சாதித்தல், வாதமாவது - உண்மையுணர்தல் வேட்கையோன் * கதை, செற்பமாவது - சாதனமிரண்டுள்ள தன்கண் வெல்லும் வேட்கை யுடையான்கதை, விதண்டையாவது - தன் கோட்பாட்டை நிலைபெறுத்தாத கதை, இம் மூன்றுவகையாலு மலைவு செய்து அறுதியிடாமலிருத்தல் விவாதம், விஞ்சையசஞ்சயமாவது - உபதேசத்தா லறிவின்றி வியவகாரத்தா லறியப்படாத மிகுந்த சந்தேகம், துதைந்திடுஞ் சுத்தசூனிய வாதமாவது - அசேதன அறிவினால் கருத்தாவில்லை யென்னுஞ் சமயத்தைச் சாதித்தல், ஞானந் தெய்வந் தருமநல் லருத்த மீனமில் வீடிவ் வைந்து நிந்தனையாவது - லௌகிகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மந்திரம் என்னும் ஐவகை ஞானத்தையும் நிந்தித்தல் - சீவமூர்த்தி பேதங்களாவன தெய்வங்களை நிந்தித்தல் - கொல்லாமை முதலிய தன்மத்தினை நிந்தித்தல் - கேட்ட அர்த்தங்களை யிகழ்தல் - அழிவில்லாத மோட்சத்தை யல்லவென்றல், இவை முதலிய மாறுபா டென்பதாம். **(105)**

* "கதையாவது - கூறுவார் பலரை யுடைத்தாய்ச் சங்கை யுத்தாங்களைப் பயக்குந் தொடர்மொழியின் கோவைப்பாடு." தருக்க சோபானமெனு நூலிற் காண்க.

106. **இந்த வதன்ம மிசைந்தவர் நரகடைந்**
**தந்தமி றுன்ப மனுபவிப் பாரே.**

**(இதன் பொருள்.)** இத்தகைய ஐவகையான அதன்ம பாவங்களைச் செய்தவர்கள், அஞ்ஞானத்துடன் பொருந்தி நரகடைந்து அளவில்லாத யாதனுசரீரத்தோடுகூடி மிகுந்த துக்கப்பற்றே அவை ராக்கியமாகவும், சுகமின்மையே அனைஸ்வரியமாகவு மனுபவிப்பார்க ளென்பதாம். **(106)**

107. **தன்ம மென்னுங் குணத்திலுண் டானது**
**நல்ல லௌகிக ஞானந் தானே.**

**(இதன் பொருள்.)** தன்மமாகிய பசுபுண்ணியத்தினாலே நல்ல லௌகிக ஞானமுண்டா மென்பதாம். **(107)**

108. **கேடில் வைராக் கியகுணந் தந்தது**
**நாடிய பௌத்த * ஞானந் தானே.**

**(இதன் பொருள்.)** ஆசையுடன் கூடியிருப்பினும் ஆசையறுதலான நடிப்புக் கெடாத வைராக்கிய குணத்தால் புத்தர் அமணர் என்பவர் நாட்டப்பட்ட ஞானமுண்டா மென்பதாம். **(108)**

* உலோகாயதன் முதலிய புறப்புறச் சமயிகள் கொள்கைகளும் ஓரோர்வகை ஞானமாமென்றும், அவை அபரஞானத்தி லடங்குமென்றும், திராவிட மகாபாடிய

முனிவர் வகுத்தனர். அது கொண்டு பௌத்தன் முதலியோர் அறிவை ஞான மென்றனர்.

109. **ஞானவை ராக்கியந் தன்னில் நன்குண்**
**டானது சாங்கிய ஞானமென் றறைவர்.**

**(இதன் பொருள்.)** சிறிது பசுஞானமும் சிறிது பிரபஞ்சவைராக்கியமுங் கூடின விடத்தில் நிரீச்சுர சாங்கியஞான முண்டாமென்று சொல்லுவ ரென்பதாம். **(109)**

110. **அருண்ஞா னமும்வை ராக்யமு மார்க்கமுந்**
**தருமால் யோக ஞானந் தனையே.**

**(இதன் பொருள்.)** நல்லறிவாகிய ஞானமும், வைராக்கியமும், அணிமாதி யஷ்டவைஸ்வரியமும் இம்மூன்றுங் கூடினவிடத்துக் கன்மயோக ஞானமுண்டா மென்பதாம். ஆல் - அசை. **(110)**

111. **குவிதரு புத்தி குணங்களுக் கதீத**
**நவிலதி மார்க்க ஞானந் தானே.**

**(இதன் பொருள்.)** எண்ணிறந்த புத்தி குணங்களுக்கு மதீதமான வழி அதிமார்க்கஞான மென்பதாம். **(111)**

112. **உலக ஞானத் ததீதமென் றோங்கிய**
**நல்லதி மார்க்க ஞான முளரெனப்**
**பன்னிய பாசு பதர்கா பாலரென்**
**றின்னோர் சனன மிலரென மொழிப.**

**(இதன் பொருள்.)** பசுஞானமென்னும் லௌகிக ஞானத்தினுக் கப்பாலாய்ப் பெரிதாய சிவஞானமல்லாத அதிஞான மார்க்கமாகிய நல்ல ஞானமுடையவர் களாகச் சொல்லப்பட்ட பாசுபதர் காபாலர் இவர்கள் அபேதமுத்தியில் சிவானுக் கிரகத்தால் மோட்சமடைந்து சனன மடையார்களெனச் சொல்லப்படுவ ரென்பதாம். **(112)**

113. **லௌகிக ஞான முளவே தாந்த**
**மாயா வாதந் தத்துவ வாதம்**
**பாட்டம் பிரபா கரபஞ்ச ராத்திரஞ்**
**சாங்கிய ரேஜ நியோகர் சுபாவ**
**வாதிகள் கன்ம வாதிகள் சொல்ல**
**வழாத சஞ்சய வாதிக ளமணர்**
**பூத வாதிக ளுலக வாதிகள்**
**பாதக முணர்சட பதார்த்த வாதிகள்**
**நியாய வாதிக ளநேக வாதிக**

**ளென்னும் பெயரின ரென்றும் பிறப்பறு**
**திருவினை யாழி யிடைசுழன் றியங்கும்**
**புண்ணிய பாவந் தம்மிலொத் திடுநா**
**ணேர்தரு சத்தி நிபாதம் பிறந்துழிச்**
**சார்குண பாசந் தனைவிட்டு நீங்குவர்**
**நீங்கிய பொழுதினி னிகழ்வினைக் கடனின்**
**றுங்கரை யேறுவ ரதுநீங் கியபின்**
**வீட்டை யெய்துவ ரவர்வீடு கூடு**
**மாசை கூடி யுயிர்க்கு மெச்சிய**
**மறைகள் விளம்பிய வீட்டை நிச்சயஞ்**
**செய்வது நியதி தத்துவ மாமே.**

**(இதன் பொருள்.)** சுவர்க்காதியின் பொருட்டாகவுள்ள லௌகிகஞானம் பல பேதப்பட்டிருக்கும். அவை - வேதாந்தம், மாயாவாதம், தத்துவவாதம், பாட்டம், பிரபாகரம், பாஞ்சராத்திரம், சாங்கியவாதம், நியோகவாதம், சுபாவவாதம், கன்ம வாதம், சந்தேகமே சொல்லும் சஞ்சயவாதம், சயினவாதம், பூதவாதம், உலகவாதம், பாதகமே யறிவாயுள்ள சடபதார்த்தவாதம், நியாயவாதம், அநேகவாதம் என்பன. இச்சமயங்களை யனுட்டித்துள்ளவர்கள் சனனமரணப் பற்றறுமல் புண்ணிய பாவ மென்னும் சக்கரத்தில் * பூட்டையும் நீரும்போலவும் † கறங்கோலைபோலவும் சுற்றித் திரிந்து, புண்ணிய பாவம் தம்மிலொத்தகாலத்துத் துலையொப்பான சத்திநிபாதம் பிறந்த பின்பு தங்களைச் சார்ந்துள்ள குணபேதமாகிய பாசங்களை விட்டு நீங்குவர்; நீங்கவே யிருவினை யென்னுஞ் சமுத்திரத்தினின்றும் கரையேறு வர். ஏறவே மோட்சவீடடைவர். இவர்களுள் மோட்சவிட்சுகளுக்கு வேதங்கள் விரும்பிக் கொண்டாடப்பட்ட மோட்சத்தை நியமிக்கும் நியதிதத்துவம் மனதளவாக வியாபித்து அப்பால் விட்டு நீங்கு மென்பதாம். **(113)**

---

* பூட்டை - இறைகூடை † கறங்கோலை - காற்றுடி.

---

114. **அந்த நிச்சயஞ் செயுமவ தரத்திற்**
**பந்த மும்மல பாவந் தன்னை**
**விழுமிய கால வேகந் தன்னுற்**
**கழல் விழைப்பது காலதத் துவமே.**

**(இதன் பொருள்.)** மோட்சத்தை நியமிக்கு மவதரத்தில் செனனவேதுவான மும்மல பந்தத்தைக் குற்றமற்ற தனது கடுமையால் நீக்குவது காலதத்துவ மென்பதாம். **(114)**

115. **கால மிறந்தது வீடெனக் கருதுவர்.**

**(இதன் பொருள்.)** மோட்சத்தில் காலமில்லையென வறிக வென்பதாம். **(115)**

116. **அப்படிக் காரிய வசுத்ததத் துவங்களும்**
**துப்பமர் காரண சுத்ததத் துவங்களுந்**
**தப்ப மாக்குஞ் சாதாக் கியத்தினை**
**யிப்படி யாசரித் திருக்குமென் றனரே.**

**(இதன் பொருள்.)** இதுகாறுங் கூறியபிரகாரம் காரியமாகிய அசுத்த தத்து வங்களும், நன்மையான காரணமாகிய சுத்த தத்துவங்களும் கிருபை பொருந்திய சாதாக்கிய தத்துவத்திஜ இந்தப்பிரகாரம் ஆசரித்திருக்கு மென்றன ரென்பதாம். **(116)**

117. **தன்னிகர் கன்ம சாதாக் கியவடி**
**வைம்மூர்த்திகளா தலிஜம் பூதமு**
**மம்முறை யாசரிப் பதுவிதி யாமே.**

**(இதன் பொருள்.)** தனக்கு நிகரில்லாத கன்மசாதாக்கியருடைய திருமேனி பஞ்சமூர்த்தியின் திரட்சியாதலால் அந்த முறையிலே சத்தியோசாத மந்திரங்களைப் பஞ்சபூதங்கள் ஆசரிக்கையாலும் அந்தக் கன்மசாதாக்கியரைப் பஞ்சபூதங்களும் சந்தேகமற ஆசரியித்திருக்கு மென்பதாம். **(117)**

118. **மூர்த்திகள் பேத முயங்கலி னம்மூர்த்**
**திகளிட மாக நின்ற வைந்தொழில்**
**செம்மை விளங்க மகிழ்ந்து செயுஞ்சிவ**
**ரூப மாகிய சுத்த குணந்தான்**
**முருக லரைந்து முகமா வதுவே.**

**(இதன் பொருள்.)** சதாசிவமூர்த்திக ளைந்தும் ஐந்து பேதமாகிய திருமேனியா யிருத்தலால் அந்த மூர்த்திகளிடமாக வெழுந்தருளியிருந்து பிரியத்துடன் அழகு விளங்கப் பஞ்சகிருத்தியத்தைச் செய்யும் தான் பரமசிவனுடைய சுத்தகுண மைந் தும் இந்தக் கன்மசாதாக்கியருக்கு மணம் பொருந்திய ஐந்து திருமுகமாக நின்றதெ ன்பதாம். **(118)**

119. **இத்தொழிற் சாதாக் கியர் திரு மேனியிற்**
**சுத்த மகேசுரந் தோற்ற மாகும்.**

**(இதன் பொருள்.)** இந்தக் கன்மசாதாக்கிய ரவதாபேதம் மயேசுரர் பேதமென்று சொன்னபடியாலும், தூலமே யவர்க்குத் திருமேனி யாதலாலும், முன் சொல்லிய சுத்தமான மகேசுரர்க்கு இவர் திருமேனியிலே தோற்ற மென்பதாம். **(119)**

120. **மொழியு மிவர் திரு முகத்திற் றேன்றிய**
**வழியில் சிவசித்தாந்தமு மதுவே**
**தழுவிய வாகம சாத்திரங் களுமே.**

**(இதன் பொருள்.)** முன் சொன்ன சதாசிவநாயஞர் திருமுகத்திலே பரசமயங்களை நிராகரணம் பண்ணுவதாய் நிலைபெற்றுள்ள சித்தாந்தம் பொருந்தின ஆகமங்கள் * ஈசானத்தில் எட்டும், சத்தியோசாதத்தில் ஐந்தும், வாமத்தில் ஐந்தும், அகோரத்தில் ஐந்தும், தற்புருடத்தில் ஐந்தும், ஆக இருபத்தெட்டும் இவற்றைப் பின்சென்ற சாத்திரங்களும் தோன்று மென்பதாம். **(120)**

* புரோர்கீத முதல் வாதுளம் வரையில் ஈசானத்திலும், காமிக முதல் அஜிதம் வரையில் சத்தியோசாதத்திலும், தீப்த முதல் சுப்ரபேதம் வரையில் வாமத்திலும், விஜய முதல் வீராகமம் வரையில் அகோரத்திலும், சௌர முதல் முகபிம்பம் வரையில் தற்புருடத்திலும் பிறந்தனவெனக் காரணாகமுங் கூறும். அன்றியம், இருபத்தெட்டாகமங்களும், ஈசானத்தில் உதித்தனவெனச் சிலவாகமங்கள் பேசும். என்னை? ஐந்து முகங்கட்குந் தனித்தனி ஐந்து முகங்களுண்டென்னு நியமங்கொண்டு ஈசானமுக சம்பந்தங்களான சத்தியோசாதாதி முகங்களி லுண்டாயின வென்னுங் கருத்துக் கொண்டேயாகலின்.

121. **இவரே காரண மெவைக்கு மென்ப**
**தித்தொழிற் சாதாக் கியலிங் கத்தே**
**நித்த சகள நிட்கள சிவனைப்**
**பத்தர் தியானம் பண்ணுவ ரன்றே.**

**(இதன் பொருள்.)** பிரம விஷ்ணு உருத்திரரை யதிட்டிக்கப்பட்ட பீடமும், அதற்குக் காரணமான மயேசுரரை யதிட்டிக்கப்பட்ட கல்லபத்திரமும், இப்படிப்பட்ட சிவாதனத்தின்மேல் எழுந்தருளியிருக்கப்பட்ட சிவமூர்த்தியான சதாசிவமும், அதன் முடி - முகம் - மார்பு - கடிதடம், பாதம் என்னும் அவயவங்களை யதிட்டிக்கும் சத்தி சத்தி காரியங்களாகிய வித்தியாதேகமும், அதற்கு மூர்த்திமாஞகிற சிவோபாதி ஐந்தும் தண்டபங்கி வத்திரபங்கியுமாய் நின்ற அவதரத்தில் அபரநாதம் அபரவிந்து வையும் பரநாதம் பரவிந்துவையும் ஒத்து அதிட்டிக்கப்பட்ட சாதாக்கியமென்னும் சிவலிங்கப்பெருமானிடத்திலே யிப்படி நித்தமாய்ச் சகள நிட்களமான பரமசிவனை அடியார்கள் பத்தியுடன் தியானிப்ப ரென்பதாம். **(121)**

122. **தனுவொடு கூடுதல் சகளந் தனுவுட**
**னனை தலில் லாதது நிட்கள மாமே.**

**(இதன் பொருள்.)** ஈசானி-பூரணி-ஆர்த்தி-வாமை-மூர்த்தி யென்னும் பெயரினர் அணுசதாசிவரில் ஈசானர் - தற்புருடர் - அகோரர் - வாம தேவர் - சத்தியோசாதர் என்னுமிவர்களை வைந்தவமே தனுவாக அதிட்டிக்கையால் தனுவென்னும் பெயர் பெற்று உபாதியினும் உபாதி சூனியத்தினும் சத்தி சிவனை விட்டுப் பிரியாதாகை யால் சத்தி யுபாதியுடன் கூடினது சகளம். சர்வசங்காரகாலத்தில் வைந்தவகாரியங் கள் மகாமாயையிலே யொடுங்குகையால் சத்தியுந் தொழிலற்றுத் தொழில் செயும் காரணத்துடனே கூடிநின்ற நிலை நிட்கள மென்பதாம். **(122)**

123. **இருடீர் முப்பத் தெண்கலை மயமா**
**முருவடி வறுசிவ னுக்குண் டாகையிற்**
**சிறக்கு மைம்முகத் தவன் திரு நாம**
**நிறக்குஞ் சகள திட்கள மெனவே.**

**(இதன் பொருள்.)** அந்தகாரத்தைக் கெடுக்குஞ் சத்தியின் காரியங்கள் ஈசானி ஐந்து திருமுடிகளாகவும், பூரணி நாலு திருமுகங்களாகவும், ஆர்த்தியானது: இருதயம் - கண்டம் - தோள்கள் - நாபி - உதரம் - முதுகு - மார்பு என்னு மெட்டு உறுப்புகளாகவும், வாமையானது: பாயு - கோசம் - தொடைகள் - முழந்தாள்கள் - கணைக்கால்கள் - புறவடிகள் - கடிதடம் - விரல்கள் என்னும் பதின்மூன்று உறுப்புகளாகவும், மூர்த்தியானது: உள்ளங்கால்கள் - உள்ளங்கைகள் - நாசி - திருமுடி - வாகுகள் என்னும் எட்டுறுப்புகளாகவும், இவ்வாறு முப்பத்தெண் கலாசத்தி சொரூபமான உறுப்புகளையுடைய பராசத்தி நிட்கள சிவனுக்குச் சுதந்தரமாகையால் இந்த உறுப்புகளுடன் கூட்டிச் சிறந்த கன்மசாதாக்கியர் திருநாமம் சகள நிட்கள மென்று நிறமுண்டாகச் சொல்லப்படு மென்பதாம். **(123)**

124. **அந்தர தனுவென வாடியு நிழலென**
**விந்தநிட் களத்திற் சகளமெய் தியதே.**

**(இதன் பொருள்.)** நின்மலமாய் அரூபமான ஆகாயத்திலே நின்மலமாய் ரூபீகரித்து இந்திரதனுபோலவும், பிரகாசமே வடிவாகிய கண்ணாடியிலே கட்புலன்க ளாற் காணப்பட்டுக் கடினமில்லாத பிரதிவிம்பம்போலவும் நிட்களத்தில் சகளம் பொருந்தின வென்பதாம். **(124)**

125. **தயாபரக் கரும சாதாக் கியரைத்**
**தியான வுணர்வு சேர்வு செப்பிற்**
**படிக நிறமுயர் படர்சடை மகுட**
**மைந்து முடிமுக மைந்தீ ரைங்கர**
**மேக தேக மிரண்டு பதாம்புயஞ்**
**சூலம் பரசு சுடர்வாள் வயிராம்**
**மேலு மபயம் வலதுகை யேந்திப்**
**பணிபா சாங்குச மணியொடு வரத**
**மினைய விடது கரங்களி லேந்தி**
**யெண்ணு மிலக்கண மியாவு நிறைந்து**
**பண்ணுறு சகலா பரணமு மணிந்து**
*** திப்பிய வறுவையுந் திப்பிய கந்தமுந்**
**திப்பிய மாலையு மிவ்வகை புனைந்து**
**நீண்ட கரங்களு நிகழொளி நகங்களு**
**மூண்டெழு சற்றே முகிழ்த்தபுன் முறுவலுஞ்**
**சாந்த ரூப மேய்ந்தினி தெவர்க்கு**
**மாடுறு கருணை யறம்பொரு ளின்ப**
**வீடருள் புரிந்து வீற்றிருந் தனரே.**

**(இதன் பொருள்.)** கிருபையே வடிவான கன்மசாதாக்கியரைத் தியானத்தா லறிந்து அடையு முறைமையைச் சொல்லுமிடத்துப் படிகம் போன்ற நிறமும், உயர்ந்து படர்ந்த சடாமகுடமும், ஐந்து திருமுடிகளும், ஐந்து திருமுகங்களும், பத்துக்கரங்களும், ஏகதேகமும், இரண்டு பாதங்களும், வலது கரத்தில் இச்சா ஞானக் கிரியையென்னு மதிகாரமான மூவிஇலச் சூலமும், பராசத்தி ரூபமாய் இலயத்தான மான மழுவும், பரமசிவனது கர்த்துருபவமாய்ச் சுத்த தத்துவங்கஇள யுண்டாக்குங் கட்டுவாங்கமும், விளங்குகின்ற வாளும், சுத்த மாயையைப் பிரேரிக்கும் அபேத குணமான பீசபூரகமும் வச்சிரமும், போகத்தானமாகிய சாதாக்கியத்தை யடைந்தவர் களுக்குச் செனனபயத்தைப் போக்குவதான அபயமும், இடது கரத்திலே ரித்திகுண மாகிய நாகமும்: இந்திரியங்கள் பத்தும் - தூலபூத மைந்தும்- சூக்குமபூத மைந்தும் - தன்மாத்திரை யைந்தும் ஆக விருபத்தைந்தையுங் காட்டி நடத்தும் மாயாரூபமாகிய பாசமும்: சங்கற்ப விகற்பமாகிய மனதத்துவத்தை நடத்துங் குணமாகிய நீலோற்பலமும் விவரணகுணமாகிய அங்குசமும்: சுத்த அசுத்த தத்துவாவைப் பிரவிர்த்திக்கும் குணமான தமருகமணியும்: ஆன்மாக்கட்குக் கன்மத்துக் கீடாகப் போகத்தைக் கொடுக்கும் குணமான வரதமும், நாதகுணமாகிய மணியும், சங்கார குணமாகிய அக்கினியையும் பொருந்தத் தரிசித்துச், சாமுத்திரிகா லட்சணம் முப்பத்திரண்டிஞலும் நிரம்பிய பரமசிவஇன யாதாரசேவையால் விளங்கும் குணமாய சதாசிவமாகிய சர்வாபரணத்தையுந் தரித்தும், திரோதாயி யென்னும் பரிவட்டமும், அருளாகிய சுகந்தமும், பரையாகிய மாஇலயும், இடை விடாமல் பொருந்தின நெடிய அத்தங்களும், பிரகாசத்தால் விளங்கிய நகமும், அனுக்கிரகாங்குரமான புன்முறுவலும், இவற்றை யெல்லா முடையவஞ யிருப்பி னும் இவற்றிற்கப்பாற்பட்டுள்ளவஞயிருந்து சர்வான்மாக்களுக்கும் தன்மார்த்தகாம மோட்சங்கஇளக் கிருபையிஞலே யினிதாக விளங்க அனுக்கிரகித்துச் சுகாதனமாக வெழுந்தருளியிருந்தன ரென்பதாம். **(125)**

* பருப்பதம் காப்பியம் என்றற் றொடக்கத்தனவொப்பத் திவ்வியமென்னும் வடமொழி திப்பியமெனத் தமிழிற் றிரிந்தது.

126. **இந்தத் தியான வெழிற்றிரு மேனியி**
**ஜலந்து சாதாக் கியமடை யும்படி**
**யவர்க்கமை கீழ்தென் வடமேற்றிசைமிசை**
**நோக்கிய முகங்கள் நுவலருந் தொழிற்சா**
**தாக்கிய மைந்தென் றுரைக்கத் தகுமே**
**யம்முக மைந்துஞ் சகளம தாம்பொழு**
**தின்னண மீசா ஞதியெ னப்படும்.**

**(இதன் பொருள்.)** இவ்வாறு தியானத்தா லறியப்பட்ட அழகிய கன்மசாதாக்கியர் திருமேனியிலே பஞ்சசாதாக்கிய மடைந்த முறைமையைச் சொல்லுமிடத்துக் கிழக்கே நோக்கிய பூர்வமுகம் சொல்லுதற்கரிய கன்மசாதாக்கிய மென்றும், தெற்கு நோக்கிய தட்சணமுகம் கர்த்துருசாதாக்கிய மென்றும், வடக்கு நோக்கிய உத்திரமுகம் மூர்த்திசாதாக்கிய மென்றும், மேற்கு நோக்கிய பச்சிமமுகம்

அமூர்த்தி சாதாக்கியமென்றும், நாலுதிக்கிலும் வியாபித்த ஊர்த்துவ முகம் சிவசாதாக்கிய மென்றும் சொல்லப்படும். இவை சதாசிவாதி பஞ்சமூர்த்திகளுடனும் கூடிச் சகளமாக நிற்றலால் சகளநிட்களமான அந்தப் பிரபாவத்தை யீசானுதி யென்று சொல்லப்படு மென்பதாம். **(126)**

127. **தொழிற்படு சாதாக் கியத்தினைச் சொல்லி**
**னிழற்பொலி சகள நிட்கள மாகையிற்**
**றஞ்சமி லீசா னுதிக டாமே**
**பஞ்ச சாதாக் கியமெனப் படுமே.**

**(இதன் பொருள்.)** நாதவிந்து ரூபமாய்ச் சிவலிங்கமான கன்மசாதாக்கியத் தைச் சொல்லுமிடத்துப் பரமசிவனது அதிகாரத்தானமாகிய சதாசிவஞ் சகள நிட்கள மாகையால் பஞ்சகிருத்தியத்தை ஈசானுதி சத்திகளைந்து மதிட்டித்து யாவற்றினுக் குஞ் தஞ்சமாய் நிற்கும் ஈசானுதி குணங்கள் தானே பஞ்சசாதாக்கியமாய் நின்றன வென்பதாம். **(127)**

128. **முதலீ சான முகமுத னான்கினு**
**மிதமுற வியாபித் திருக்கு மதுதான்**
**பூசா காலம் புருடம்பார்த் திருந்தே**
**யாசறு பூசாந் தத்தினில் முன்போல்**
**மோசமில் நாலு முகத்தினு முறுமே.**

**(இதன் பொருள்.)** முந்தின ஈசானுதி முகமானவை சாத்தியோசாதம், வாமம், அகோரம், தற்புருடம் என்னும் நான்கு முகங்களிலும் வியாபித்திருந்தாலும் பூசாகாலத்தில் ஆவாகனம் பண்ணுகையால் ஈசானம் சத்தியோசாதத்திலும், சத்தியோசாதம் வாமத்திலும், வாமம் அகோரத்திலும், அகோரம் தற்புருடத்திலும் வியாபித்து, குறைவற்ற பூசாந்தத்தில் அருக்கியங் கொடுக்கையால் தற்புருடம் அகோரத்தையும், அகோரம் வாமத்தையும், வாமம் சத்தியோசாதத்தையும், சத்தி யோசாதம் ஈசானத்தையும் ஆசரித்து நிற்கையால் ஈசான முகம் குற்றமற முன்பு போல நாலு முகத்திலும் வியாபித்திருக்கு மென்பதாம். **(128)**

129. **இவ்வண மிலக்கண மெய்து * சதேசரை**
**யவமறு சத்தி சிவான்மிக மாகிய**
**விவ்விலிங் கந்தனிற் சிந்தித் தந்தமில்**
**தொழிலது தொழிலி லொடுங்கு மேனுந்**
**தொன்மொழி முறைமை யினை முகச் சாதாக்**
**கியத்தொழில் கிரியா பூசையுய்ப் பதுவே.**

**(இதன் பொருள்.)** கீழ்ச்சொன்ன இலக்கணங்களையுடைய சதாசிவ நாயனுரைக் குற்றமில்லாத சத்தி சிவங்களுடைய வண்மையான சிவகத்தினிடத் திலே தியானித்து முடிவற்ற கிரியாபூசைக்குக் கன்மசாதாக்கியரே கருத்தாவாக

# சதாசிவரூபம்

வேதாகமங்கள் சொல்லுகையால் ஐந்து திருமுகங்களையுடைய கன்மசாதாக்கிய ரைத் தற்புருட முகத்திலே கிரியாபூசை பண்ணுவ தென்பதாம். **(129)**

---

⁎ சதா + ஈசர் = சாதேசர் = சதாசிவர்.

---

130. **சாற்று சதாசிவர் தந்திரு மேனி**
**யேற்ற வித்தியா தேக மிவர்தா**
**மெல்லா மறியு மியல்பது நயன**
**நல்லோ ருணர வருஞான மதிதைய**
**மீங்கிவர் பாக்கிய மெட்டுஞ் சிரமா**
**மோங்கள வின்மை யுயர்சிகை பூரண**
**மொள்ளொளி கவசம் பெருமை யத்திரம்.**

**(இதன் பொருள்.)** இவ்வாறு சொல்லிய சதாசிவநாயனருடைய திருமேனி ஆன்மாக்களுடைய கன்மத்துக்கீடாக வறிந்திரட்சிக்குங் குணம் மந்திரமாகையால் மந்திர ரூபமான சத்தி வித்தியாதேகம், சாதாக்கியமென்னும் அதிகாரத்தையுடைய பரமசிவனது இச்சா ஞானக் கிரியைகளால் சர்வகாரியங்களையு மதிட்டித்து அறிந்து செய்யுந் தொழில்களாகி நின்ற குணத்தி னுரிமையான வியல்பு நேத்திரம், முத்தான்மாக்களுக்கு உணர்த்தப்பட்ட அருட்சத்தி யிருதயம், பரமசிவனது கிரண மான இச்சா ஞானக் கிரியை மூன்றும் - இவர் பஞ்சகிருத்தியம் செய்யுங் குண மாகிய ஈசானதி ஐந்தும் - ஆக எட்டுக் குணமும் ஐஸ்வரியமாக உடைத்து ஆகை யாலும் இவை சதாசிவத்தினுக்குத் தலைமையான குணமாகையாலும் சிரசு, (இங்கு இச்சை நிட்களம் - ஞான மகேசுரம் - கிரியை சதாசிவமூலமாய் இலயபோக அதிகாரமாகிய திருமேனி மூன்றும், தண்டபங்கியாய் நின்ற பஞ்சபூதமான கலைகளை யதிட்டித்து நிற்கும் ஈசனுதியைந்தும், ஆக எட்டும் பதிக்கு ஐஸ்வரியம்) அனுதியிலே தனக்குச் சுதந்தரமாயுள்ள சிவகரணம் மேலான சிகை, நிட்களத் தன்மையை மறைத்து நின்ற ஞானக் கிரியைகள் மிகுந்த பிரகாசமான கவசம், ஆன்மாவினுடைய அனுதி மலத்தைச் சங்கரிக்கும் பெருமையை அத்திர மென்ப தாம். **(130)**

131. **முந்து மறைதெரி முதலா வரண**
**மைந்து பிரமமோ டாறங் கமுமே**
**வீசிய வபயா வரணமு மிச்சைக்**
**கீசர நந்தா திகளெண் மருமே**
**மூன்ற வதுகண முதல்வர்க ளெண்மரு**
**நான்கா வதுமக வான்முத லைந்திரு**
**பாங்கா ருலக பாலரு மாகு**
**மைந்தா வதுதச வாயுத மாமே.**

**(இதன் பொருள்.)** அணுசதாசிவர் ⁎ பதினெருபேரும் சிவதத்துவத்தைப் பெற்றுப் பிரதம ஆவரணத்திலும், அதிற்பக்குவரான அனந்தராதி அட்டவித்தியேசுரர்

இரண்டா மாவரணத்திலும், நந்திமுதலான அட்டகணேசுரர் மூன்று மாவரணத்திலும், இந்திரன் முதலான தசலோகபாலகர் நான்கா மாவரணத்திலும், தசாயுதங்கள் ஐந்தா மாவரணத்திலும் இருப்பரென மேலான வேதங்கள். சொல்லு மென்பதாம். **(131)**

* அணுசதாசிவர் பத்தென்றே சிலவாகமம் பகரும்.

**[இனி லிங்கபூசையில் ஆவரணங்களுடைய வியாத்தியைச் சொல்லுகின்றனர்.]**

132. **பஞ்சா வரணத் தலம்பக ரும்பொழு**
**தம்புய கேசரந் தனித ளந்தம்**
**பீட கண்டம் பிரகீட பீடந்**
**தேடரும் பிரமச் சிலையிவை யைந்தே.**

**(இதன் பொருள்.)** பஞ்சாவரணத்தலங்கள் சொல்லில் பதுமத்தில் கேசரமான கல்லபத்திரத்திலும், தேளாக்கிரமான விகிருதவாரியிலும், ஞானரூபமான பீடகண்டத்திலும், கந்தபீசாங்குரமான கீடபீடத்துலும், அளவிடப்படாத ஆதார சத்தியான ஆதாரசிலையிலும், முறையே கற்பாவரணம், வித்தியேசுராவரணம், கணேசராவரணம், லோகபாலராவரணம், அத்திராவரணம் வியாபித்திருக்கு மென்ப தாம். **(132)**

133. **அமல நிருந்தரு ளம்போ ருகத்தின்**
**சமமில் கிழங்கு தான்பிர மாண்டங்**
**கருதிய புனன்முதற் கலைமுடி வாய**
**விருபத் தொன்பது தத்துவ நாளம்**
**புறவிதழ் மாயை யகவித ழாவது**
**விரல்கெழு சுத்த வித்தை கேசரங்**
**கன்னிகை யெண்ணென கலைகுண் டலியா**
**வித்தையைம் பத்தோ ரக்கர மதனிற்**
**கருதிய கேசரங் கன்னிகை யதன்மேற்**
**பரவிய வட்டம் பருதி மதிதீ**
**மருவிய சத்தி யெனவிரி மண்டலம்.**

**(இதன் பொருள்.)** நின்மல சிவனுடைய அதிகாரத்தானமாகிய சதாசிவரெழுந்தருளியிருக்கும் பதுமத்தினுடைய ஒப்பற்ற கிழங்கு பிரமாண்டமாகிய பிருதுவி தத்துவமாம்; அப்புமுதல் கலையீறுய்ச் சொல்லிய இருபத்தொன்பது தத்துவமும் நாளமாம்; அமரேசன் முதலாய புவன மெழுபத்திரண்டும் நாளத்தின் கண்டங்களாகிய முள்ளுகளாம்: புத்திகுணமாகச் சொல்லப்பட்ட பஞ்சசற்பாவம் நாளத்தின் சூத்திரமான நூலாம்; புறவிதழைச் சுமந்து நிற்கும் முடிச்சுப்படம் மாயா தத்துவமாம்; உள்ளிதழ் சுத்த வித்தியா தத்துவமாம்; வெற்றியினை யுடைய சுத்தவித்தியா புவன கலாசத்திக ளறுபத்து நாலும் கேசரமாம்; கன்னிகை அறுபத்துநாலு கலையாதரமான குண்டலியாம்; வித்தை ஐம்பத்தோரக்கரமாம்; இதனில்வட்டம் - மகேசரத்தில்வட்டம்

- கன்னிகையில் வட்டம் - அதன்மேற்பரவிய வட்டம் ஆகிய நான்கும் ஞானம் - கிரியை - இச்சை - ஆதியென்னும் சத்திகளால் வியாபிக்கப்பட்ட சூரியமண்டலம் - சோமமண்டலம் - அக்கினிமண்டலம் - பொருந்திய சத்தி மண்டலம் என விரிந்த மண்டலமாகச் சொல்லப்படு மென்பதாம். **(133)**

133. **மேதினி யிலுயர் வித்தை வியாத்தி**
**யான சத்தி மண்டல மளவாய்த்**
**தீயன விலாத சிவாதன மாகுந்**
**தடமலி சாதாக் கியமுதற் சமனை**
**முடிவா கச்சிவ மூர்த்திய தாகுந்**
**தரைமுத லுன்மனை யளவு நிலாவிய**
**பரைசிவன் பூரண மூல மெனப்படும்.**

**(இதன் பொருள்.)** பிருதுவிமுதல் மாயையீறான முப்பத்தொரு தத்துவங்களையும் அதிட்டிக்குஞ் சுத்தவித்தையினுடைய வியாத்தியான சத்திமண்டலமென்னும் அபரவிந்து அபரநாதம்: பரவிந்து பரநாதமாய், வாக்குக் குற்றமில்லாத சிவாதனமாவது - தத்துவ முப்பத்தாறையும் இதற்குப் பாதாளமாகிய மகாமாயையென்னுங் குடிலையு மாதனமாம்; சகள நிட்களமாய்நின் றனுக்கிரகத்தைப் பண்ணும் சதாசிவமாய் நின்ற சுத்தத்தத்துவ மிருபத்துமூன்றும், இவற்றை யதிட்டிக்கும் சமனை உன்மனையும் பரமசிவனுக்குத் திருமேனியாம்; சத்தி யுபாதிகளைத் திருமேனியென்றும் பிருதுவிமுதல் பரையீறாக வியாபித்து நிற்கும் பரமசிவனுடைய தன்மையை மூலமென்பதாம். **(133)**

134. **இப்படித் தரை முதற் சமனை யீறுய்ச்**
**செப்பவி யாபிக்கும் பரம சிவனது**
**பொருவி லுயர்பரி பூரணந் தன்னை**
**யறிவி லழுந்துத லாவா கனமே.**

**(இதன் பொருள்.)** இவ்வாறு * மூலமந்திரத்தால் தரிசிக்கப்பட்ட மேலான குற்றமற்ற பரிபூரணத்தைச் சிவப்பிரசாதமாகிய வருளினு லறிந்து அதிலேயழுந்துவது ஆவாகன மென்பதாம்.

(விரிவுரை.) ஆவாகன மென்றும் அபிமுகீகரணமென்று மிருவகைத்து. பிரதிட்டாகாலத்திலே சர்வசங்காரமளவாகச் சிவலிங்கத்தில் சானித்தியமாவதற்குப் பண்ணுஞ் சிவனியாசம் ஆவாகனம். தினந்தோறும் பூசாகாலத்தில் சிவலிங்கத்திலெழுந்தருளியிருக்கும் சதாசிவனது நிட்களமாய நான்கு முகத்திலும் வியாபித்திருக்கிற ஈசான முகந் தன்னைப் பார்க்கும்படிப் பண்ணுவது அபீமுகீகரணம். **(134)**

* மூலமந்திர மென்பது பஞ்சாக்கிரத்தினை.

136. **அலையா தழுந்த நிலைபெறல் தாபனம்.**

**(இதன் பொருள்.)** மேற்சொன்ன அழுத்தம் நிலைபேறுகப் பொருந்துவது தாபன மென்பதாம். **(136)**

137. **இவன்றன தறிவு சிவன்பூ ரணத்திலுஞ்**
**சிவன்பூ ரணத்துவ மிவன்றன தறிவிலு**
**மொன்றையொன் றகலா துறவுசெய் திருப்ப**
**தொன்றிய சந்நி தானமென் றுரைப்பர்.**

**(இதன் பொருள்.)** பெத்தநிலையில், சிவனதறிவுக்கு மறிவாகிய பூரண முள்ளள வும் இவனறியுந் தாசோகவறிவும், இவனது தாசோகமாகிய வறிவுள்ளளவுஞ் சிவனதனுக்கிரகமும் இடைவிடாம லொன்றி யன்னியோன்னியமாகுந் தன்மை யைச் சந்நிதான மென்பதாம். **(137)**

138. **இவனிடத் துறுமறி வென்று மொழியாச்**
**சமையது † தானே சந்நிரோ தனமே.**

**(இதன் பொருள்.)** கீழ்ச்சொன்ன தன்மையாகிற இரண்டறுத லொழியாமலி ருக்கிற அறிவே சந்நிரோதன மென்பதாம். **(138)**

† தானென்பது கட்டுரைச் சுவைபட நின்றது பிறண்டுங் காண்க.

139. ***பாத்திய வாச மருக்கியம் பழுத்த**
**லான்ம சுத்தி நிமித்த மாகவு**
**நறுமல ரதனை நல்வீட் டின்பங்**
**குறுகுத லேது வாகவுங் கொடுத்து.**

**(இதன் பொருள்.)** கீழ்ச் சொன்ன நிலையில் சிவனுடைய பிரகாசமாகிய இச்சா ஞானக் கிரியைகள் பொருந்தின தானமாகிய சீர்பாதத்தில் பொருந்துவது பாத்தியம்; சத்திகளுடைய விளக்கத்தில் அருளென்னுந் தன்மையையுடைய திருமுகத்தில் பொருந்துவது ஆசமனம்; திருமுகமென்னுமருளைக் கழலுந் தன்மையாகிய திருமுடி யில் பொருந்துவது அருக்கியம்; இவை சத்தி காரியமாதலால் தனு கரண புவன போகமாகிய குற்றத்தைக் கழன்றிருக்கையே ஆன்ம சுத்தி; சுத்த சைதன்னிய புட்பத் தை நிட்களத்தியான பரமசிவனிடத்தில் சாயுச்சிய வேதுவாகக் கொடுக்க வென்ப தாம்.

**(விரிவுரை.)** கிரியாபூசை பண்ணுமிடத்து † மகேசுரமாகிய பாதத்திலும், சதாசிவமாகிய முகத்திலும், நிட்களமாகிய முடியிலும், பாத்திய ஆசமன அருக்கிய ங்களை ஆன்மசுத்தி நிமித்தமாகக் கொடுத்து நிட்களமான வானந்தம் பெருகைக்கு முடியிலே புட்பம்சாத்து. **(139)**

* இச்சூத்திரமுதல் 150-வது சூத்திரம் வரையில் குளகம்
† இங்கு மகேசுரம் - சகளம்; சதாசிவம் - சகளநிட்களம்; திருமுடி - நிட்களம்.

**140. நிகழ்சல சுத்தி நிமித்த மாக**
**மகிழ்வுட னேதிரு மஞ்சனம் பண்ணி.**

**(இதன் பொருள்.)** அருட்போதமே மலமாகையால் அந்தப் போதமாகிய மலத்தை நீக்கத் திருமஞ்சன மாட்டுவ தென்பதாம். **(140)**

**141. நீங்கருங் கரும சுத்தி நிமித்தம்**
**தீங்கறு தத்துவத் திரயஞ் சாத்தி.**

**(இதன் பொருள்.)** போதங் கழலு மவதாரத்தில் மனோ வாக்குக் காயத்தால் வந்த கன்மவாதனையைக் கழலுவது குற்றமற்ற தத்துவத்திரயம்.

**(விரிவுரை.)** சஞ்சித ஆகாமிய பிராரத்துவம் நீங்குவதே தத்துவத் திரயம். **(141)**

**142. ஞான விளக்க நண்ணுதற் பொருட்டுத்**
**தூப தீபந் துதைந்தினி தளித்து.**

**(இதன் பொருள்.)** வாதனையைக் கழற்றுவது கிரியாசத்தி யாதலால் அந்தக் கிரியாசத்தி தூபமாம்; ஞான சத்தியின் வாசமாய ஞான விளக்கமா யிருத்தல் தீபமாம்; ஆகலின், அறியாமையை நீக்கி யறிவைக் கொடுக்கப் புகுவதே தூப தீப மென்பதாம். **(142)**

**143. சட்குணந் தனக்குச் சார்தற் பொருட்டுப்**
**பொக்கமில் போகாங் கம்பூ சித்து.**

**(இதன் பொருள்.)** சர்வஞ்ஞத்துவம், பரிபூரணத்துவம், அனாதிபோதத்துவம், சுதந்தரத்துவம், அலுத்தசத்தியத்துவம், அனந்தசத்தித்துவம் என்னும் சிவகுண மாறும் பெறுதல் மெய்யாகிய போகாங்க பூசை யென்பதாம்.

**(விரிவுரை.)** சிவபோகத்துக் கங்கமாகிய சிவகுணங்களைப் பெறுதல் போகாங்க பூசை. **(143)**

**144. பின்மன மமைவு பிறத்தற் பொருட்டு**
**நைவேத் தியமுக வாசமு நல்கி.**

**(இதன் பொருள்.)** அனுதியிலே கிருத்தியத்தையுடைய சிவனுக்குப் பராபரப் போதக் கழற்றியே திருத்தியாதலால் பராபர போதமாகிய தற்போதத்தை நைவேத்தி யமும் முகவாசகமுமாகக் கொடுப்ப தென்பதாம்.

(விரிவுரை.) பெத்தத்தன்மையி னிறைவே நைவேத்தியம்; நிறைவு குன்றுமை யே முகவாசம். **(144)**

145. ⁎ **மூவகைத் துக்க முடிகையின் பொருட்டுப்**
**பாவக மான பவித்திரஞ் சாத்தி.**

**(இதன் பொருள்.)** தைவிகம், பௌதிகம், ஆன்மிகம் என்னு மூவகையான வாதஊையாகிய துக்கத்தை நீக்குவது பாவிக்கப்பட்ட பௌத்திர மென்பதாம்.

**(விரிவுரை.)** மனுே வாக்குக் காய மிறந்தவிடத்தில் முன்னழியாம லதிட்டித்து நின்ற இச்சா ஞானக் கிரியையின துண்மையைப் பொருந்துவது பௌத்திரம். **(145)**

---

⁎ மூவென்பது மூன்றென்று மெண்ணுக்கு ஆதேசமாம்.

---

146. **எல்லா நன்மையு மெய்துதற் பொருட்டு**
**நல்ல செபத்தை நயந்துநி வேதித்து.**

**(இதன் பொருள்.)** சர்வகுணங்களுங் கழன்று மோக்கம் பெறுதற்கு அகார உகார மகார விந்துநாதத்தின் கழற்றியே செபமாதலால் செபமாகிய வுரையை நீங்குவது செப நிவேதன மென்பதாம்.

**(விரிவுரை.)** மூலமந்திரத்தை இலயாந்தமாக உச்சரித்து மேலான பஞ்சாக்கர த்தின் நிஊலயைக் கூடுவது செப் நிவேதனம். **(146)**

147. **அயன்மா லிவர்கீ ழாகையின் பொருட்டுச்**
**சயமான புறவெதிர் தண்டம் பண்ணி.**

**(இதன் பொருள்.)** தற்போத மென்னும் அதிகாரத்தை நடத்தும் பரம விட்டு ணுக்களால் ஞானக்கிரியைகஊ நீங்கி நாயகன் அடிமையாய நிற்குந் தன்மை நமஸ்கார மென்பதாம்.

**(விரிவுரை.)** வணங்குகிறவர்கள் பிரம விட்டுணுக்கள் ஆகையால் அவர்கள் தொழிஊயும் அவர்கஊ யதிட்டிக்கும் சூக்குமமான ஞானக் கிரியைகள் அதிகாரத் தையும் நீங்குவது நமஸ்காரம். **(147)**

148. **அகண்டம தாகிய வமலஊன யிப்படிச்**
**சகளம தாகத் தான்பூ சித்தபி**

**னகள் சகள மாகையின் பொருட்டு**
**முகனுற செபித்தபின் முன் போல் நிட்கள**
**தானாக வுஞ்செய் தற்பணம் பண்ணி.**

**(இதன் பொருள்.)** நின்மலனுகிய பரமசிவனது சத்தியுபாதிகளைத் தரிசித்தல் பூசை; இப்படிச் சகளபூசை பண்ணின பின்பு அந்தச் சத்தி யுபாதிகளையும் அவற்றை நடத்தும் சீவோபாதிகளையும் பின்னமறத் தரிசித்தல் செய்தற்பண மென்பதாம்.

**(விரிவுரை.)** பஞ்சகிருத்தியத்திற்கு அப்பாற்பட்டுச் சத்தியுபாதி சிவவுபாதிக ளற்று முன்புள்ள நிட்கள பாவத்தைத் தரிசிப்பது செப தற்பணம். **(148)**

149. **தாணுவை விட்டுத் தான் பிரியாமல்**
**வேணு மென்று மீளவும் பூசித்**
**தலைவற வேதா னமல னிடத்தி**
**னிலைபெற வேண்டித் தனைநிவே தித்து.**

**(இதன் பொருள்.)** கிருத்திய காரணமான பரசிவத்தை யடைந்தவன் மீண்டும் பஞ்சகிருத்தியத்தில் அகப்படாதிருத்தலையே அட்டபுட்பமாகச் சாத்தி ஆன்மகாரியமாகச் சிவனுபாதி யடைந்தாலும் ஆன்மா சிவோபாதியைப் பொருந்தாமல் அதற்கதீதமாய் அலைவற்று நின்மலமாயுள்ள பரசிவத்தில் சலனமற்றிருப்பதே ஆன்மநிவேதன மென் பதாம். **(149)**

150. **அசுத்தத் துவங்களை யன்னிய மாக்கி**
**யுறச்சிவன் பரிபூ ரணமுள வளவு**
**மிகுத்துணர் ஞான விழியாற் பார்த்து**
**நிலைபெறு சுத்தமு மாய்நின் மலமாய்**
**நல்லசத்தியமாய் ஞான மயமா**
**யாதி யந்த மோதுவ தன்று**
**யாதொன் றினும்பிறி வின்மை யுடைத்தாய்**
**முந்நூற் றறுபான் மூன்று மெனச்சொலு**
**நூற்ச மயிக ளாலறி வரிதாய்ச்**
**சாந்தமு மாயுரை தருநிட் களமா**
**யேந்தா னந்தமு மாயன் னியமாய்**
**நியதி காலங் களைநீங் கியதாய்த்**
**துயர் தீர் காரிய சூனிய மாகிக்**
**காரண சூனிய மாகிக் கம்பமற்**
**றுரையுணர் விறந்த தாகி யுயர்ந்த**
**பரம சிவனது பாங்கினி லாங்கே**
**திருமிகு ஞான நேத்திரஞ் சேர்த்திச்**
**சேருமின் னிலைமையைத் திவ்விய ஞானத்**
**தாலறி தல்பரா முகவருக் கியமே.**

**(இதன் பொருள்.)** பந்தமாயுள்ள முப்பத்தொரு தத்துவங்களையும் அன்னிய மாக்கி, கிரியையாகிய சுத்தவித்தியா புவனத்திலிருந்து மயேசுர முதல் அஞ்ஞான மீறுன சிவோபாதிகளையும் இவற்றில் வியாபித்திருக்கும் பரிபூரணமாகிய பரசிவத் தையும் மேலான அறிவினுல் அறிந்து, தான் அதற்கதீதமாயிருந்து - அனுதிசுத்தமாய் - மலரகிதமாய் - நல்ல வுண்மையாய் - அனுபவமே வடிவாய் - முதல் நடு இறுதியற்றதாய் - சர்வான்மாக்களுக்கும் உயிர்க்குயிராய் - மாயாவாதி முதல் ஐக்யவாதியீறுன * முந்நூற்றறுபத்து மூன்று சமயிகளாலும் அளவிடுதற்கரி தாய் - விகாரமற்றதாய் - நிட்களமென்று சொல்லப்பட்டுள்ளதாய் - வேறுபாடில்லா ததாய் - காலநியதிக் கப்பாலாய் - போகத்தை நீக்குங் காரிய தத்துவமான நாதவிந்து க்களுக் கப்பாலாய் - அதற்குக் காரணமான ஞானக்கிரியைகளை நீங்கியுற்றதாய் - அசைவற்று வாக்கு மனுதீத கோசாமாய் - மேலான அனுபவ சிவனிடத்தில் நன்மை மிகுந்த அருளுக்காலடைந்து, அப்படி அனுபவ நிலையையடைந்த தன்மையு மழிந்து நிற்பது பராமுக வருக்கிய மென்பதாம். **(150)**

---

* இவர்களியாகும் முக்கூற்றுப் புறச்சமயத்து ளடங்குவர்.

---

151. **இந்த நிலையிற் றரிசன மென்று**
**மந்தா திருப்பது ஞான பூசை**
**யந்தரி யாகமு மாம்புற யாகமு**
**மிந்த நெறிபிறி வில்லா தாதலிற்**
**புந்தியில் ஞான பூசையென் றதுவே.**

**(இதன் பொருள்.)** கீழ்ச் சொன்ன தரிசனம் அந்தரியாகபூசை யாதலால் ஞானக்கிரியை சேர்ந்து தொழிலுடன் கூடியுள்ள பகிர்முகமாகிற கிரியாபூசையிலும் இந்தத் தரிசனம் ஒழியாதிருத்தலால் அந்த விருவகைப்பட்ட பூசைகளு மொரு தன்மையா யறிதல் ஞானபூசை, இந்தத் தரிசன மன்றிப் பகிர்யாகமாகிற கிரியா பூசையே பிரதானமாய் அந்தர்யாகத்திற் சிறிது தரிசனமுங்கூடி அந்தர்யாக மென்றும் பகிர்யாகமென்றும் பூசிப்பது பொய்யாத கிரியாபூசை யென்பதாம். **(151)**

152. **இப்படி யிடையற விதய கமலத்**
**தற்புத முதல்வனை யருச்சனை புரிபவர்**
**தப்பற வடைகுவர் சாயுச் சியமே.**

**(இதன் பொருள்.)** இப்படிச் சொல்லப்பட்ட தரிசனமாகிய ஞான பூசையிலே அற்புத முதல்வனுகிய அனுபோக சிவனைப் பூசை பண்ணுஞ் சீவன் முத்தர் நிலைபேறுன சாயுச்சியமே பெறுகை சந்தேகமில்லை யென்பதாம். **(152)**

சதாசிவநாயனுர் ஆதனம் மூர்த்தி மூலம் முதலிய வருமாறு:– தானம் - பதுமமாம்; அதன் கிழங்கு பிருதுவியாம்; அப்பு - தேயு - வாயு - ஆகாயம்: சோத்திரம் - தொக்கு - சட்சு - சிங்வுவை - ஆக்ராணம்: சத்தம் - பரிசம் - ரூபம் - ரசம் - கந்தம்: வாக்கு - பாதம் - பாணி - பாயுரு - உபத்தம். மனம் - புத்தி - ஆங்காரம் - சித்தம்:

# சதாசிவரூபம்

புருடன் - ராகம் - வித்தை - நியதி - காலம் கலை - ஆகிய இவை யிருபத்தொன்பதும் நாளமாம்; அமரேசன் முதல் சிகேதனீறுன புவனம் எழுபத்திரண்டும் நாளத்தின் முள்ளுகளாம்; புத்தி குணமாகச் சொல்லப்பட்ட பஞ்சாசற்பாவம் நாளத்தின் சூத்திர மான நூலாம்; புறவிதழைச் சுமந்துநிற்கும் முடிச்சுப்படம் மாயையாம்; உள்ளிதழ் சுத்தவித்தையாம்; கலாசத்திகள் அறுபத்துநாலும் கேசரமாம்; மகேசுரம் காயில் வட்டமாம்; சதாசிவம் விதையாம்; வட்டம் சத்தியாம்; இங்ஙனம் பிருதுவி முதல் சத்தியீறுன முப்பத்தைந்து தத்துவங்களும் சதாசிவ நாயனுருக்கு ஆதனமாம்.

அபரவிந்து கலைகளும், அபரநாத கலைகளும்: பரவிந்து கலைகளும், பரநாத கலைகளும், பஞ்ச சத்திகளும் சதாசிவ நாயனுருக்கு மூர்த்தியாம்.

பிருதுவி முதல் சமனையீறுக வியாபிக்கும் பரமசிவன் சதாசிவ நாயனுருக்கு மூலமாம்.

**திருவிழா வரலாறு:–** முதல் விழா - பிராகிருதி நடனம், இரண்டாம் விழா - இருவினை நடனம், மூன்றும் விழா - முக்குண நடனம், நாலாம் விழா - அந்தக்கரண நடனம், ஐந்தாம் விழா - பஞ்சேந்திரிய நடனம், ஆறும் விழா - காமாதியாரண நடனம், ஏழாம் விழா - சப்த கோடி மகாமந்திரபத நடனம், எட்டாம் விழா - வித்தியா தத்துவமும் ஆணவமும் நடனம், திருக்காப்பு நாள் - திரோதாயி நடனம், திருச்சாந்து திருவெழுச்சியில் நவபத நடனம், திருவுலாப் புறத்தில் சத்திமுத்தி நடனம், திருவனந்தலில் வாதனை நடனம், பத்தாம் விழாவில் பேரின்பாதீத நடனம், பதினேராம் விழாவில் பதிபசுபாச நடனம்.

**சதாசிவரூபம் முற்றிற்று.**